உ

செந்திலாண்டவன் திருவடி துணை

திருக்கயிலாயபரம்பரைத் தருமபுர ஆதீனம்

ஸ்ரீ சம்பந்த சரணாலய ஸ்வாமிகள்

அருளிச்செய்த

# கந்தபுராணச் சுருக்கம்

திருப்பனந்தாள் - காசிமடம்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தி ஸ்வாமிகள்

திருவுள்ளப்பாங்கின்படி

கலைமகள் ஆசிரியர் :

ஸ்ரீ வித்துவான் கி. வா. ஜகந்நாதன், B. O. L.,

எழுதிய

குறிப்புரை முதலியவற்றுடன்

அல்லயன்ஸ் கம்பெனியார்

பிரசுரித்தது

1945

உ

செந்திலாண்டவன் துணை

## ஸ்ரீ காசிமடம் - திருப்பனந்தாள்



ஸ்ரீ ஆதிகுமரகுருபர ஸ்வாமிகள்

# சைவ சித்தாந்தப் பிரசங்கப் பரிசளிப்பு ரூ. 1000
# ரூபாய் ஆயிரம்

உ

செந்திலாண்டவன் துணை

# சைவ சித்தாந்தப் பிரசங்கப் பரிசு

# ரூ. 1000 - ரூபாய் ஆயிரம்

ஐந்து வயதில் செந்திலாண்டவனருளால் ஊமை நீங்கப்பெற்றுக் கந்தர் கலிவெண்பா பாடியருளியும், மதுரையில் ஸ்ரீ மீனாட்சியம்மை மீது பிள்ளைத்தமிழ் பாடி அம்மையால் முத்தாரம் அணியப் பெற்றும், திருமலை நாயக்க மன்னர் வேண்ட, மன்னன் முதல் உலகிலுள்ள மக்கள் அனைவருக்கும் உலகறிவூட்டுவான் நீதிநெறி விளக்கம் அருளியும், தருமையும் கமலையும், விரிதமிழ்க் கூடலும் திருநகராக அரசு வீற்றிருந்த மாசிலாமணி தேசிகராயரைக் கண்டு கேட்டுப் பண்டார மும்மணிக் கோவை பகர்ந்தும், தில்லை, திருவாரூர் தெரிசித்து மும்மணிக்கோவை நான்மணிமாலை நவின்றும், காசி சென்று தமிழர்கள் பிற மொழிகளை யும் கற்றல் வேண்டுமென அறிவுறுத்துவான் சகலகலாவல்லிமாலை பாடி யருளியும், உயிருள்ள சிமத்தின் மீதேறி முகலாய மன்னன் ஔரங்கசீப் பாதுஷாவைக் கண்டு அன்னவனால் உயர்மதிப்புப் பெற்று, அம்மன்னன் உதவியால் ஸ்ரீ விசுவேசுவரர் ஆலயத்தை விளக்கமுறச் செய்தும், கேதார கட்டத்தில் அறச்சாலை நிறுவியும் இன்னோரன்ன செயற்கரிய பணி பல செய்தருளிய முனிவர் பெருமான், ஸ்ரீலஸ்ரீ காசி வாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் ஆவார்கள்.

ஷை சுவாமிகளின் 257-ஆம் ஆண்டு மகேசுவர பூசை விழா காசியி லும், பனசையிலும் வருகிற பார்த்திவ ஆண்டு வைகாசித் திங்கள் 16-ஆம் நாள் செவ்வாய்க்கிழமை (29—5—45) நடைபெறும். அம் முனிவர் பெருமான் ஞாபகார்த்தமாக, இப்போது திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 20-ஆம் பட்டத்தில் விளங்கிவரும் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகளவர்களால் இந்த ஆயிர ரூபாய் பிரசங்கப் பரிசு ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது.

**பரிசளிப்புக்குரிய விதிகள :**

1. தனித்தமிழ் வித்துவான் தோவில் தோச்சி பெற்றவர்களோ, அல்லது அதறகுச் சமமான தமிழ்ப புலமையுளளவர்களோ, சைவசித் தாநத சாத்திரம நனகு கற்றுணாநது ஈளிது தாருண வருஷததில் (13-4-44 முதல 12-4-45 முடிய ஓராணடு கால அளவிற்குள்) எழுபத்தைநதுககுக குறையாத சைவசமய சாததிரப பிரசங்கம தமிழில் செய்திருபபாாகளாயின் அவர்கள் மட்டுமே இதிற கலநது கொளவதற குரியர். (அத்தகைய ரேடியோப பிரசங்கமும கணக்கில் சேர்ததுக் கொளளபபெறும.)

2 அவாகளுள் பிரசங்கவனமை, சைவசித்தாநதப பயிற்சி, ஒன றுககு மேற்பட்ட ஜில்லாக்களில சொற்பணி புரிநதமை, பிறமொழிப புலமை, பிறபபொழுககம் முதலியவைகளில் முதனமையாக வருபவ ருக்கே ஷை விழாவில் ரூ. 1000 பரிசாக அளிககபபெறும.

3. இதறகுரிய இவவாணடுத தோவு திருபபனநதாளில் ஸ்ரீ காசிமடததுத தலைவா ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணநதித தமபிரான சுவாமி கள் அவர்களால ஷை விழாவில (29-5-45) நடததபபெறும். தலைவரவர் கள் தீாபபே முடிவானது.

4. இதிற கலநதுகொள்ள விருபபமுடையார் தஙகள் பெயர், ஊா, தமிழ், ஆரியம், பிற மொழிபபுலமை, சைவ சமய சாத்திரப பிரசங்க எண, பணியாற்றிய தலஙகள் (அத்தாட்சியுடன) திருபபனந் தாள ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகளவாகளுககு 30-4-45-ககுள் விணணப பிததுககொளளல வேண்டும. விண்ணபபங்கள கிடைத்தவுடன் பரிசீ லனை செய்யபபெற்றுத தோவில கலநதுகொளவதறகு உரியவாகளுககு அனுமதிச் சீட்டு அனுபபபபெறும.

5. இபபரிசு ஆணடுதோறும் அளிச்கபபெறும. ஒருமுறை பரிசு பெற்றவா மறுமுறை பெறுவதற்கு உரியவரல்லர்.

ஸ்ரீ காசிமடம்,
திருபபனநதாள,
31—3—45.

உததரவுபபடி,
**S. பொன்னுசாமி முதலியார்**
காறுபாறு.

# பொருள் அடக்கம்

# முன்னுரை

வேதவியாஸரால் அருளிச் செய்யப்பெற்றுச் சூதபுராணிகரால் நைமிசாரணிய முனிவருக்குத் திருவாய் மலர்ந்தருளப் பெற்றனவாகிய மகா புராணங்கள் பதினெட்டு. இவற்றுள் அளவினால் பெரியது ஸ்காந்தம்; சற்றேறக்குறைய லக்ஷம் கிரந்தம் உடையது அது. பல வகையான உபாக்கியானங்களும், உபதேசங்களும் நிரம்பிக் கடல்போலப் பரந்திருக்கும் அதன் பெருமை, "எந்தப் பொருளும் கந்தப்புராணத்திலே" என்ற பழமொழியளவிலும் வந்திருக்கிறது. அது சனற்குமார சங்கிதை, சூதசங்கிதை, பிரமசங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கரசங்கிதை, சூதசங்கிதை என்ற ஆறு பிரிவுகளை உடையது. இவ்வாறினுள் சங்கரசங்கிதை என்பது பன்னிரண்டு கண்டங்களால் ஆகியது. அவற்றுள் முதற் கண்டத்தின் பெயர் சிவரகசிய கண்டம் என்பது.

சிவரகசியகண்டம் ஏழு காண்டங்கள் அடங்கியது. சம்பவகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ஷகாண்டம் என்னும் முதல் ஆறு காண்டங்களையும் தமிழில் இனிய செய்யுட்களால் ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியார் இயற்றினார். அதுவே கந்தபுராணம் என்ற காவியமாகும். ஏழாவதாகிய உபதேச காண்டத்தைக் கோனேரியப்ப முதலியாரென்னும் புலவர் தனியே தமிழ்ச் செய்யுளுருவத்தில் இயற்றியிருக்கிறார்.

ஸ்ரீ கச்சியப்பசிவாசாரியார் இயற்றிய கந்தபுராணம் சொற்பொருள் நயமும் பக்திச்சுவையும் மிகுந்ததாக இருத்தலின் தமிழ்ப் புலவர்களாலும் முருகன் அடியார்களாலும் சிறப்பாகப் போற்றப்பெற்று வருகின்றது. பலர் அதனைப் பாரா

யணம செய்து வருகிறார்கள். அது ஆறு காண்டங்களும் 94 படலங்களும் 10,346 செய்யுட்களும் கொண்டது. முருகக் கடவுளுடைய திருவவதாரம் முதல வள்ளியம்மை திருமணம் இறுதியாக அபபெருமானுடைய இனிய சரித்திரததை விரிவாகச சொல்வது. இடையிடையே பல கிளைக் கதைகளை உடையது.

கந்தபுராணச் சுருக்கமென்பது, அப்புராணததிலுளள வரலாறுகளைச் சுருக்கி 1049 செய்யுட்களில், திருக்கைலாய பரம்பரைத தருமபுர ஆதீனததைச் சாாநத ஸ்ரீ சம்பந்த சரணாலய ஸ்வாமிகளால் இயறறப்பெற்றது. கநதபுராணத்தில உள்ள விரிவான வருணனைகளையும, சில உபாக்கியானங்களையும் விலககிவிட்டு அதில் விரிவாகச் சொல்லப்பெற்ற வரலாறுகளைச் சுருக்கமாக அமைத்துச செய்யபபட்ட இநநூல் முருகக்கடவுள திவ்விய சரிததிரததை விரைவில் தெளிந்து கொள்பவாகளுக்கு உரியதாக விளங்குகினறது. படலப்பிரிவை விலக்கி ஒவ்வொரு காண்டததிறகும் ஒவ்வொரு பிரிவாக வைதது ஆறு பகுதிகளாக இநநூல இயன்றுள்ளது. "தொகுததல வகுததல் தொகைவிரி மொழி பெயாப்பு" எனற நான்கு வகையான யாபபுககளுள் தொகுததல என்னும் வகையைச் சாாநதது இது.

இநநூலின் மூலம ஸ்ரீ யாழ்ப்பாணத்துநல்லூா ஆறுமுக நாவலரவர்களுடைய விததியாநுபாலன யநதிரசாலையில் முதல் முதலில அசசியறறப் பெற்று வெளியாகி யிருக்கிறது. பிறகு, காஞ்சீபுரம் மகாவித்துவான் ஸ்ரீ சபாபதி முதலியாரவர்கள் இயற்றிய பொழிப்புரையும், திரு. வி. உலகநாத முதலியாரவாகள் எழுதிய விருததியும் அடங்கிய உரைப்பதிப்பொன்று (1925) வெளியாகியுள்ளது.

சிறந்த செந்தமிழ்ச்சுவை பயின்ற இந்நூலைக குறிப்புரையுடன வெளியிடவேண்டுமென்ற தம் திருவுள்ளக் கருத்தைத்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தி ஸ்வாமிகளவர்கள் குறிப்பித்தார்கள். அவர்கள் திருவுள்ளக் கருத்தின்படி இந்நூல் ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகள் மகேசுவர பூஜைத்தினமாகிய இன்று வெளியாகிறது.

திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த ஸ்ரீ குமரகுருபரஸ்வாமிகள் நிறுவிய திருத்தொண்டை வழி வழியே செய்துவரும் பனசைக் காசி மடத்திலிருந்து அத்தருமபுர ஆதீனத்தைச் சார்ந்த மற்றொரு மெய்ஞ்ஞானப் பெரியார் இயற்றிய நூல் வெளிவருதல் இயைபுடைய செயலே யாகும். இத்தகைய அரிய நூல்களை வெளியிடும் விஷயத்தில் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிகள் அவர்கள் காட்டிவரும் ஊக்கம் தமிழ்நாட்டாரால் மிகவும் பாராட்டற்குரியது. சென்ற வருஷம் அவர்களுடைய கட்டளையின்படி உரையுடன் ‘ அபிராமி அந்தாதி ’ வெளியானதை அன்பர்கள் அறிவார்கள்.

இந்த நூலைப் பதிப்பித்தற்குரிய அவகாசம் மிகச் சுருங்கியதாக அமைந்தது. காகிதம் பெறுதல், அச்சிடுதல் முதலிய பல துறைகளிலும் இடையூறுகள் பல நேரும் இக்காலத்தில் ஸ்ரீ ஷண்முகநாதன் திருவருளால் தான் இது நிறைவேறியதென்று சொல்லவேண்டும். புத்தகம் இந்த உருவத்தில் வருவதற்கு வேண்டிய எல்லா முயற்சிகளையும் மேற்கொண்டு உபகாரம் செய்த மயிலாப்பூர் அல்லயன்ஸ் கம்பெனியார்பால் மிக்க நன்றி பாராட்டுகிறேன். மிகக் குறுகிய காலத்துக்குள் விரைவாகவும் அழகாகவும் இதனை அச்சிட்டுத் தந்த இராயப்பேட்டை, சாது அச்சுக்கூடத்தாரின் உதவியையும் நான் மறவேன்.

காசி மடாலயம் அன்னமும் கலவியும் வழங்கிப் புகழ் பெற்று விளங்குவது. ஞானமும் புலமையும் ஒருங்கே படைத்த பெரியார்களைத் தலைவர்களாகப் பெறும் பாக்கியம் உடையது. இப்போது மடாலயத் தலைமை தாங்கி விளங்கும்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தி ஸ்வாமிகள் அவாகள் தமிழ்க் கலாசாலை நிறுவியும், அறிஞரைக கொண்டு பல பிரசங்கங் களைச செய்விததும்,நலல நூல்களை வெளியிடுவித்தும் தமிழும் சைவமும் தழைத்தினிதோங்கச செய்து வருகிறார்கள். அவர்க ளுடைய பல தருமச் செயல்களில இப்புததகத்தின் ஆரமபத் தில உள்ள அறிக்கையில் கண்ட ‘சைவ சித்தாநதப் பிரசங்கப் பரிசு’ம் ஒன்று.

ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமிகள இன்னும் இததகைய அருநதொண்டு கள பலவற்றைச் செய்துகொண்டு பலலாண்டு பலலாண்டு வாழ்நது விளஙகவேணடுமெனறு ஸ்ரீ செந்திலாண்டவன திரு வடிகளைப் பரவுகினறேன்.

இங்ஙனம்

26-5-1945 கி. வா. ஜகந்நாதன்

# ஆசிரியர் வரலாறு

## 1

இந்த நூலின் ஆசிரியராகிய சம்பந்த சரணாலய ஸ்வாமிகள் தம்முடைய இளமையிலேயே சிவபக்தி மிக்கவராய்த் திருக்கைலாய பரம்பரைத் தருமபுர ஆதீனத்தைச் சார்ந்து ஆண்டுள்ள அடியார்களோடும் துறவியர்களோடும் பழகி வந்தனர். இவருடைய ஒழுக்கத்தையும் பக்திச் சிறப்பையும் உணர்ந்த அவர்கள் அக்காலத்தில் அவ்வாதீனத்தில் ஆறாம் பட்டத்தில் ஞானதேசிகராக எழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ திருஞான சம்பந்ததேசிக சுவாமிகளின் கருணைத் திருப்பார்வைக்கு இவரை இலக்காகச் செய்தனர். அக்காலத்தில் இவர் இலக்கண இலக்கியங்களும், சித்தாந்த நூல்களும் ஓதிக்கை வந்தனர். அவ்வாதீனத்தைச் சார்ந்த ஸ்ரீ வெள்ளியம்பல வாணத் தம்பிரான் என்ற புலமைப் பெரியார்பால் பாடம் கேட்டார்.

அப்பால் ஞானாசிரிய மூர்த்தியாகிய ஸ்ரீலஸ்ரீ திருஞான சம்பந்ததேசிக சுவாமிகளிடம் ஞானோபதேசம் பெற்று விரத முனிவராகி நிட்டை புரிந்து ஒழுகினார். தம்முடைய ஞானாசிரியரிடம் இணையற்ற அன்பு பூண்டவர் இவர் என்பதற்கு இவருடைய திருநாமமாகிய 'சம்பந்த சரணாலயர்' என்பதும் ஒரு சான்று.

இவர் புலமையாலும் ஒழுக்கத்தாலும் ஞானத்தாலும் சிறந்து விளங்கியமையின் இவருடைய புகழ் தமிழ்நாட்டிலும் மைசூர் முதலிய பிரதேசங்களிலும் பரவியது. அவ்வத் தேசத்திலிருந்து தருமபுர ஆதீனத்தில் எழுந்தருளியிருந்த ஞானாசிரியரைத் தரிசிக்க வருவாரெல்லாம் இவருடைய பெருமையையும் உணர்ந்து பாராட்டிச் சென்றார்கள். அங்ஙனம் சென்றவர்கள் வாயிலாக இப்பெரியாரின் சிறப்பை

உணர்ந்து அக்காலத்தில் மைசூரை ஆண்டிருந்த மன்னர்பிரான் இவரைத் தரிசித்து இவருடன் பழகவேண்டுமென்னும் அவா நிரம்பியவரானார். தமிழ் நூல்களில் ஓரளவு அறிவுடையவர் அவ்வரசர். அவர் தம் கருத்தை ஸ்வாமிகளுக்குத் தக்கார் வாயிலாக விண்ணப்பித்துக்கொள்ள இவர் தம் ஞானாசிரியரிடம் விடைபெற்று மைசூருக்கு எழுந்தருளினார்.

ஸ்வாமிகளுடைய துறவுக் கோலத்தில் அரசர் உள்ளம் ஈடுபட்டது. இவருடைய சம்பாஷணையிலும் இயல்புகளிலும் தனிச்சிறப்பைக் கண்டு தெய்வமெனப் போற்றினார்; சிலகாலம் தம்முடனே இருக்கவேண்டுமென்று பிரார்த்திக்க அங்ஙனமே ஸ்வாமிகள் அங்கே இருந்தார்.

ஸ்வாமிகள் அவ்வாறு இருந்த காலத்தில் நாளுக்கு நாள் ஸ்வாமிகளின் தவ ஒழுக்கச் சிறப்பும், ஞானசீல நலமும், தமிழ்ப் புலமையும் அரசருக்குப் புலனாயின. தமக்கு என்று ஒன்றும் வேண்டாராகிப் பிக்ஷை எடுத்து உண்ணலையே மேற்கொண்டிருந்த இவருடைய வைராக்கியம் மன்னருக்குப் பெரு வியப்பை உண்டாக்கியது.

அப்பால் அவ்வரசர் முருகக் கடவுளின் திவ்ய சரித்திரத்தை ஸ்வாமிகள்பால் கேட்டார். கச்சியப்ப சிவாசாரிய ஸ்வாமிகள் இயற்றிய கந்தபுராணத்திற் சிலசில பகுதிகளை ஸ்வாமிகள் இடையிடையே எடுத்துச்சொல்லி அப்பெருமான் திருவருள் விளையாடல்களைப் பிரசங்கித்தார். அரசர் மனமுருகி நின்றார். பிறகு, "இந்தப் புராணம் விரிவாக இருக்கிறது. முருகக் கடவுள் சரித்திரத்தைத் தொடர்ச்சியாக இதில் உள்ளபடியே சுருக்கமாகச் சொல்லும் நூல் ஒன்று இருந்தால் எம்போலியருக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். அத்தகைய நூலைத் தேவரீரே இயற்றியருள வேண்டும்" என்று ஸ்வாமிகளை வேண்டிக் கொண்டார். "இதுவும் திருவருட் செயலே" என்று மகிழ்ந்து ஸ்வாமிகள் இப் புராணச் சுருக்கத்தைப் பாடி நிறைவுறுத்தினார். அரசருடன் திருச்செந்தூர் அடைந்து செந்திலாண்டவன் சந்நிதியிலே இதனை அரங்கேற்றி வந்தார்.

மைசூர் அரசர் மகிழ்ந்து ஸ்வாமிகளுக்குக் காணிக்கை யாகப் பொன்னும் மணியும் வழங்கினர். அவற்றை ஸ்வாமி கள், "இவை குருமூர்த்தியின் திருவடிகளுக்கு ஆகுக!" என்று வைத்தார். அரசர் மீட்டும் ஒருமுறை பொன்னும் மணியும் அளிக்க அவற்றை, "இவை சிவபெருமானுக் காகுக" என்று வைத்தார். அரசர் மூன்றும் முறையும் அங்ஙனமே சமர்ப்பிக்கையில், "இவை அடியார்களுக்கு ஆகுக" என்று வைத்தார். ஸ்வாமிகளின் வைராக்கியச் சிறப்பை உணர்ந்த மன்னர் பெருவியப்பை அடைந்தனர்.

வேந்தர் ஸ்வாமிகளைச் சிவிகையில் எழுந்தருளச் செய்து நகர்வலஞ் செய்விக்க வேண்டுமென்ற எண்ணங்கொண்டு இவர்பால் தெரிவித்தார். இப்பெரியார், "குருமூர்த்தி களுடைய திருவுள்ளக் கருத்தறியாமல் இது செய்யோம்" என்று கூறவே, அரசர் தம் விருப்பத்தைத் தருமபுர ஆதீனத் தலைவர்களுக்குத் தெரிவித்து அவர்களுடைய உடம்பாடு பெற்றுப் பிறகு சிறப்பாக இவரை நகர்வலஞ் செய்வித்துக் கண்டு களித்து இன்புற்றார்.

ஸ்வாமிகளால் அரசர் தருமையாதீனத்தின் பெருமையை யும் வரலாற்றையும் அங்கே எழுந்தருளியுள்ள ஞானதேசிக மூர்த்திகளின் சிறப்பையும் உணர்ந்துகொண்டார். "அவ் வாதீனத்தில் உள்ளார் என்ன செய்துகொண்டிருப்பார்கள்?" என்று மன்னர் ஒருமுறை கேட்கவே, ஸ்ரீ சம்பந்தசரணலயர் அதற்கு விடையாகப் பின்வரும் செய்யுளைக் கூறினர்:

**ஆய்வார் பதிபசு பாசத்தின்**
**உண்மையை ஆய்ந்தறிந்து**
**காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல்**
**லாங்கல்வி கேள்வியல்லல்**
**ஓய்வார் சிவானந்த வாரியுள்**
**ளேயொன் றிரண்டுமறத்**
**தோய்வார் கமலையுள் ஞானப்ர**
**காசன்மெய்த் தொண்டர்களே.**

அரசா, "இததகைய பெருமையுடன விளங்கும் ஆதீனத்தைப பூலோக கைலாசம் எனறுதான் சொலலவேண்டும்" என்றெண்ணிப பல பொருளகளைத தருமபுரத்தில் எழுநதருளியிருநத குருமூாததிகளுக்குப் பாதகாணிககையாக விடுததாா. அன்றியும் ஆண்டு தோறும நலல இலக்கணங்களையுடைய பசுககளை அவ்வாதீனததுக்கு வழஙகி வநதாா.

சிலகாலம் மைசூரில் இருநத ஸ்ரீ சம்பநத சரணாலய ஸ்வாமிகள பிறகு பல சிவஸ்தலங்களைத தரிசிததுத தருமபுரததை அடைநது குருதரிசனம செய்துகொண்டு வாழநது வநதாா. அவவாதீன முதல ஞாஞசிரியராகிய ஸ்ரீலஸ்ரீ குரு ஞானசம்பநதாமீது இவா இயறறிய சிகாரததின மாலை என்ற பிரபநதம ஒன்று உண்டு.

## 2

கநதபுராணச சுருககததால இவ்வாசிரியருடைய இயல்புகள சில விளங்குகினறன. தமமுடைய குரு பீடமாகிய திருககைலாய பரமபரைத் தருமபுர ஆதீனததில் இவருக்கு இருநத பகதி அளவறறது. அவ்வாதீன முதலவராகிய குரு ஞானசம்பநதருடைய குரு, கமலைஞானப்பிரகாசா என்பவா. 'அடியார்களுடைய மும்மல இருளைப் போககும் ஞானமாகிய கிரணங்களையுடைய ஞான பானு அப்பெருமான். அந்த ஞானக் கதிரோனது சந்நிதியில் அனபுடையாருடைய இருதய தாமரைகள் மலர்கின்றன. வீணான குதாக்க வாதம் செய்பவர்களுடைய புன்மதியாகிய நிலவு மங்கிப போகின்றது' (8) என்று அவருடைய பெருமையை இவர் பாராட்டுகிறாா. குருமூாத்தியை, "கருணை மழை பொழியுமிரு கடைக்க ணாளன், பார்புகழும் ஞானசம்பந்த னெந்தை பரமன்" என்று துதிக்கிறாா. அவருடைய திருவருளால் தாம் இந்நூலைப் பாடியதாகச சொலகிறாா. "இவவளவு பெரிய நூலைச் சுருக்கிச் சுவை குன்றாமல் சொலவதற்குரிய தகுதி என்பால் இலலை. எனக்கும் இக்கதைக்கும எததனையோ தூரம். தனக்கிணை தானே யான சம்பநதன் கமலை வேநதன், கனக்கவே யென்பா லன்பாற் கருணைவைததிடுத லாலே, உனற்கருங் காந்த

தன்னை உரைத்தனன் சுருக்கி" (14) என்பது இவருடைய விநயத்தையும் குருபக்தியையும் புலப்படுத்துகிறது. சூரியோதயத்தை வருணிக்கும்போது ஓரிடத்தில், "எங்கள் குருமூர்த்திக்கு முன்னே வந்தவர்களுடைய ஆணவப் படலம் கெட்டு ஓடுவது போல இருள் அகன்றது" என்று பாடுகின்றார்.

"கந்த மாமலர்ப் பொதும்பர்சூழ் கமலைமா நகர்வாழ்
எந்தை ஞானசம் பந்ததே சிகனறனை எதிர்ந்தார்
பந்த ஆணவப் படலமவிண் டிரிந்திடும் படிபோல
அந்த ரம்புவி மறைத்தபே ரிருளகன் றதுவே." (517)

இறுதியில்,

"மெத்தும் இன்ப வியாபகம் ஆகிய
முத்தி தந்தெனை ஆட்கொண்ட முன்னவன்
பத்தா மெய்த்தசம் பந்தன் கமலைவாழ்
அத்தன் வாழி" (1047)

என்று வாழ்த்துகிறார்.

இந்த நூலுக்கு முதல் நூலாகிய கந்த புராணத்தின் பாலும் அதனை இயற்றிய கச்சியப்ப சிவாசாரியாரிடத்தும் இவருக்குள்ள நன்மதிப்பை, கச்சியப்ப சிவாசாரியாருடைய துதியாக உள்ள செய்யுளால் அறியலாகும். கந்த புராணத்தை, "சலதி யமுதினைநிகர் செந்தமிழ்", "அன்புறு தமிழ்" என்று புகழ்கிறார். கச்சியப்பரை அருட்கொண்டலென்கிறார்.

இந்த நூலைப் பாடி நிறைவேற்றியபொழுது இப்பெரியார் மிக்க இன்பத்தை அடைந்திருக்க வேண்டும். இதனை, "கந்தப் புராணச் சுருக்கமும் நிறைந்தது களிப்பால்" (1044) என்ற அடி குறிப்பிக்கின்றது. இந்நூல் செந்தி லாண்டவன் திருச்சந்நிதானத்தில் அரங்கேற்றப்பெற்ற தென்பதை,

"சீரு லாவிய செந்தில் நகரிடை
ஏரி னோடரங் கேற்றிய இந்நூல்" (1048)

என்பதனால் உணரலாம்.

முருகக் கடவுள்பால் இப்பெரியாருக்கு உள்ள அன்பு இந்த நூலைப் பாடியதனாலேயே விளங்கும். இடையிடையே அப்பெருமானுக்கும் தமக்கும் உள்ள அன்புத் தொடர்பைச் சில வகையான குறிப்புக்களால் இவர் புலப்படுத்துகிறார்.

" தூவடிவேற் குமரேசன் அடிய னேன்புன்
சொல்லினுக்கும் இரங்கியருள் சுரக்கும் பெம்மான் " (5)

" நம்மை அளித்திடு கந்தனை " (95)

" பிணியான தறுத்தெனை ஆளுமருட் பெருமானை " (127)

" எமை யாளுடைய செவ்வேள் " (154)

" எனையா ளுடைய செவ்வேள் " (349)

" எமை யாளுடைய வள்ளல் " (757)

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சமணரோடு வாது செய்த செய்தியை ஓரிடத்தில் உவமையாக எடுத்து ஆளுகிறார். ஆகாயத்தில் நட்சத்திரக் கூட்டங்களுக்கிடையே சந்திரன் உதயமான செய்தியை, " மதுரையைப் போன்ற வானத்தில் இருள் நிரம்பிய மேகங்கள் சமணரைப் போலிருக்க, சிவனடியாரைப் போலத் தாரகைக் குலம் விளங்க, அக்கினியைப் போன்ற செவ்வானத்தினிடையே திருஞான சம்பந்தர் இட்டு வேகாமல் இருந்த ஏட்டைப் போலப் பிறைச் சந்திரன் ஒளி விட்டது " (639) என்று வருணிக்கின்றார்.

குருலிங்க சங்கம பக்தியிலே தலைசிறந்த ஆசிரியர் சைவ சித்தாந்த நுண்பொருள்களிற் சிலவற்றை ஏற்ற இடங்களிலே புலப்படுத்திச் செல்கிறார்.

பரமசிவம் ஆனந்த மயமாகி எங்கும் வியாபகமுள்ள தாகி எல்லாவற்றிற்கும் மேலான பொருளாய் இருப்பதென் பதும் (2), சிவபெருமானே கருணையினாலே ஆசிரியராக எழுந் தருள்வா ரென்பதும் (9), ஆணவமலம் நீங்கப் பெற்றார் இன் புறுவ ரென்பதும் (517), முத்தியாவது இன்ப வியாபகமாக இருப்பதென்பதும் (1047), சிவாகமத்தால் உணர்த்தப்படுவன பதிபசுபாசம் என்னும் மூன்றும் (40) என்பதும், சிவபிரா னுடைய திருவருளே சக்தி வடிவாக இருப்பதென்பதும்(2, 3),

அச்சக்தியே ஞான மயமாகி ஐந்தொழிலுக்கும் ஆதாரமாகியுள்ளது என்பதும் (3) பிறவும் இவர் உணர்ததும் சித்தாந்த நூற் செய்திகள்.

பஞ்சாட்சரம், திருநீறு என்பவற்றையும் (1046), சிவனடியார்களையும் (1046-7), சமயாசாரியர்களையும் (7) வாழ்த்துகின்றார்.

கதைப் போக்கில் சிவபரத்துவத்தை விளக்கும் பல செய்திகள் இதில் உள்ளன. அவை யெல்லாம் மூல நூலிலும் காணப்படுவன.

ஏற்ற இடங்களில் அரிய நீதிகளை எடுத்துக் காட்டுதல் காவிய ஆசிரியர்களுடைய மரபு. விதி வலிது என்பதை இவர் பல இடங்களில் பல வகையாகப் புலப்படுத்துகிறார்.

தவத்திற் சிறந்த காசிப முனிவர் மாயையின் உருவத்தைக் கண்டு காமநதியூடே மூழ்கினர். அது விதியின் பயன் என்று கூறுவாராகி ஆசிரியர்,

"முனைவினை யாலிடர்செய் காமநதி யூடே
மூழ்கின னியாரெனினும் முனைவினை போமோ" (203)

என்கிறார்.

பானுகோபன் தேவலோகத்தின்மேல் படையெடுத்து வருகிறான். இந்திரனும் இந்திராணியும் தேவலோகத்தை விட்டுப் போய்விட்டார்கள். அவர்களுடைய இளமைந்தனாகிய சயந்தன், அசுரன் படையெடுத்து வருவதைக் கேட்டுத் துணையின்றி நிற்கும் தன் நிலைமையை நினைந்து வருகிறான். கடைசியில் விதியை எண்ணி அவன் சண்டைக்கு எழுகிறான்.

"தந்தையும் இல்லை பெற்ற தாயிலை குரவ னென
எந்தையும் இல்லை செய்வ தென்னென இதயத் துன்னி
முந்தையில் விதியை யாரே முடித்திட வல்லார் ஈண்டு
வந்தது வருக வென்று வானவ ரோடும் போனன" (333)

இங்கே ஆசிரியர் விதியின் வலிமையைப் புகுத்தியிருக்கிறார்.

சிஙகமுகன் சூரனுக்கு அறிவுரை கூறுகின்ருன். சூரன் கேட்கவில்லை; சினம் கொள்கிருன். அபபோது சிங்கமுகன்,

“சற்றுநம மொழியுட் கொண்டிலனை அநதோ
தலையினில் விதியையார் தவிர்த்திட வல்லார்” (451)

என்று விதியின் பெருமையை நினைக்கிருன்.

தககனுடைய ஆணைக்கு அடஙகித தேவா சிவபிரானைப் புறக்கணிதத செயலுககும விதிதான் காரணமாக நிறகின்றது.

“என்சொல் கேளிதை எனசொல் கேனெம
தீசன மேன்மை அறிநதுமப
பொன்செ யஞ்சடை யானை யெள்ளிய
புல்லா பட்டது கண்டுநீள்
கொன்செ யுநதுயர் மாய வாழ்வு
குறிததி தறகும் இசைநதனா
மின்செய் வானவர் ஆத லாலவினை
வெல்ல வல்லவர் இல்லையே!” (874)

அமைச்சருடைய இயலபு (435), வீரருடைய இயல்பு (562) முதலியவற்றை அஙகங்கே இபபெரியாா குறிப்பித் துள்ளார்.

காவியங்களில் விரிவாக உள்ள வருணனைகளை இவர் அமைக்கவில்லை. சுருங்கிய நூலில் அவற்றிற்கு இடம் இல்லை யன்றே? ஆயினும் சில இடங்களில் சூரியோதயததையும் (454, 516, 656), சூரியாஸ்தமனத்தையும் (638, 799), சநதிரோதயத்தையும் (570, 639) அழகாகவும் சுருக்கமாகவும் வருணிததிருக்கிருர்.

சொற்பொருள் அணிகளும் வழி யெதுகை முதலிய தொடை நயங்களும விரவ இநநூற செய்யுட்கள அமைநதிருக்கின்றன.

“கன்னற் சிலைவே டனைவிடுதது” (81) எனபதில் மன்மதனை என்ற பொருளோடு, இடத்திற்கு ஏற்ப வேடனை,

என்ற பொருளும் தொனிக்கின்றது. முதிய உருவங்கொண்டு வந்த முருகவேளைக் குறவருக கரசன், "நீர் விரும்பியது யாது?" என்று கேட்க, அவர்,

"இவ்வரை யிற்குமரி, தீதற வாடுற வந்தனம்" (1011)

என்று கூறுகிறார். இக்கூற்றில், 'இமமலையிலுள்ள அழியாத தீர்த்தத்தில் பாவம் போக நீராட வந்தோம்' என்ற பொருளோடு, 'இங்குள்ள வள்ளியென்னும் கன்னியிடம் துன்பமற அளவளாவ வந்தோம்' என்ற பொருளும் தொனிக்கின்றது. விநாயகக் கடவுளுடைய வணக்கத்தில் (4) பல மரங்களின் பெயர்கள் தொனிக்கின்றன.

"பெரியோன் காதை சிறியோமிங் கறிய" (20)

"சிறுமான் செங்கைப பெருமான்" (42)

"விலங்கலிடை விலங்காபபுள விலந்து மோகம" (53)

"எண்ணலா னெண்ணுவான" (604)

"துன்றுறுபபாரை துன்ற மடைந்தார" (791)

"இடம்பு ரிந்தவள் வலம்புரி யாகி" (851)

"பணியான் பதம் பணிந்து" (946)

முதலிய பகுதிகளில் முரணணி வந்துள்ளது.

ஒருவரையோ ஒரு பொருளையோ குறிக்கும்போது நேரே குறிக்காமல் ஒன்றனோடு ஒன்று தொடர்புடையவற்றை ஒரு தொடராக்கிக் குறித்த பொருளைப் புலப்படுத்துவது ஒருவகையான சமற்காரம். வீரவாகு தேவரை,

"பங்கழிலா நீடிலங்கை மூடு மல்லின்
பகைவனவன் பகைவனவன் பகைவ னானேன்" (6)

என்று இவ்வாசிரியர் சமற்காரம்படக் குறிக்கின்றார். வேறோரிடத்தில் அவரையே,

"ஆனைதன் பின்னவன் பின்னவன்" (614)

என்பர். பானுகோபனை,

கக் கோறு (340) என்னும் தொழிற் பெயரையும் இவர் அமைத்து வழங்குகிருர். 'உந்து' என்ற சொல்லைப பல இடங்களில் உயர்ந்த என்னும் பொருளில் உபயோகிக்கிருர். அற்றம், ஆனவா, ஈடு, குயிற்றல், கொன், தற்று, மெதத்தும் முதலிய சொற்களை அடிக்கடி இவர் வாக்கில் காணலாம்.

கந்த புராணததில் வரும் சொறகள் பலவற்றை அபபடி யப்படியே அவ்வவ்விடங்களில் இவர் எடுத்தாண் டிருக்கிருர். விரிநதிருக்கும அப்புராணக் கதையைச சுருககிச் சொலலும் போது செறிவுடைய சொறகளை வழஙகுதல்இன்றியமையாதது. இவ்வாசிரியருடைய செய்யுட்கள பொருட் செறிவும் இன் ஞைசையும உடையன. பல சநதஙகளையும் வழியெதுகை முதலிய தொடை நயங்களையும் உடைமையால இசசெய் யுட்கள் ஓசை நயததிற சிறநது விளஙகுகினறன. அவசிய மில்லாத எதனையும இநநூலிற காணல் அரிது. மூலக் கதைப் போககு அம்முறையே அமையும்படி வைதது, கநத புராணத் திலுளள பதினுயிரம பாடலகளையும் படிதது உணரத்தக்க பொருளை 1049 பாடலகளால் எளிதில் உணரும்படி வைதத இவ்வாசிரியருடைய நனமுயறசி தமிழ் பயிலவோருக்குப் பேருபகாரமாக விளங்குவதாகும்.

உ

செந்திலாண்டவன் திருவடி துணை

# கந்தபுராணச் சுருக்கம்

## கடவுள் வணக்கம்

### விநாயகர் காப்பு

(கலிவிருத்தம்)

பொங்கு கநத புராணச் சுருக்கநூல்
இங்கி சைததிட வின்பொடு முற்றுவான்
மங்கை பாலகன் மாதங்க மாமுகப
புங்க வன்றுணைப் பொற்பதம் போற்றுவாம்.

### சிவபெருமான்

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

2. சீர்கொண்ட வானந்த மாகி யெங்கும்
செறிவாகிப பரமாகித திரம தாகி
ஏர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை யிடத்திற் கொண்டோன்

---

1. பொங்கு - புகழ்மிக்க. முற்றுவான - நிறைவேறும் பொருட்டு. மங்கை - உமாதேவியாருடைய. மாதங்க மாமுகப புங்கவன் - யானைமுகக் கடவுளாகிய விநாயகர். பொன் - பொலிவு.

2. எங்கும் செறிவு ஆகி - இடையீடின்றி எங்கும் நிறைந்த பொருளாகி; அகண்ட பரிபூரணப் பொருளாகி. பரம் - மேலாம் பொருள். திரமது ஆகி - நிலைபெற்ற பொருளாகி. ஏர் - அழகு, எழுச்சி. கருணையே தன் திருவுருவமாகப பெற்று. இதனை, உருவமாகி எழில்கொண்ட மலைமகளை என உமாதேவியாருக்கு ஏற்றி உரைப்ப

கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
    கடவுளர்வந் தடிபரவுங் கடவுள கொன்றைத்
தார்கொண்ட முடியனவ னடியைத் தாழ்ந்து
    தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம். உ

பராசத்தி

3. மாற்கரிய செம்பதத்தோன் றேவி யாகி
    வலவினையே னென்றாவிக் காவி யாகி
மேற்கருணைத் திருவுருவ முடையா ளாகி
    வித்தகமா யைந்தொழிற்கும் வித்தாய் நின்ற
சேற்கருங்கட் டளவநகைக் களபக் கொங்கைச்
    சிற்பரையிங் கெமையாளு முமையாள் செம்பொற்
காற்கமலந் தலைக்கமலம் பொருந்தத் தாங்கிக்
    கைக்கமலங் குவித்தருந்துங் கமலந் தீரவாம். ங

---

தும் பொருந்தும் சிவபெருமானுடைய திருவருளே சத்தியென்பது சாத்திரத் துணிபு. "கருணைத் திருவுருவ முடையா ளாகி" என்பர் பின். "அருளது சத்தி யாகும் அரன்றனக்கு" (சிவஞானசித்தியார்.) இடத்தில் - வாமபாகத்தில். தாழாத பெருங்கதி - வீட்டு நெறி.

3. மாலுக்கு அரிய. கருணைத் திருவுருவம் உடையாள். "கருணை திரு வுருவ மாகி எழில்கொண்ட மலைமகளை" (2) என்றார் முன்னும். வித்தகமாய் - ஞானமாகி. ஐந்தொழில் - சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்தியங்கள். சத்தியே சிவத்தின் பஞ்சகிருத்தியத்திற்கும் காரணமாதலை, "பரந்தபரா பரையாதி பரன் திசைை பராஞானங் கிரியைபர போக ரூபம், தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத் தனுகரண புவனபோ கங்கள் தாங்க, விரிந்தவுபா தானங்கள் மேவி யொன்றாய் விமலமாய் ஐந்தொழிற்கும் வித்தாய் ஞாலத், தரந்தைகெட மணிமன்று ளாடல் காணும் அன்னை" (சிவப்பிரகாசம்) என்பதனால் உணரலாம். சேல் கருங்கண் - சேல்மீனைப்போன்ற கரிய திருவிழியை உடைய. தளவ நகை - முல்லையரும்பைப் போன்ற பற்கள். களபம் - கலவைச் சந்தனம். காற்கமலம் - திருவடியாகிய தாமரையை. தலைக்கு அமலம் பொருந்த - தலைக்குத் தூய்மை அமையும் படியாக. அமலம் பொருந்தத் தலைக்குத் தாங்கி என்றுகூட்டி, யாம் மலத்தினின்றும் நீங்கித் தூய்மை பெறும்படியாகச் சிரத்தினிடத்தே தாங்கி என்று பொருள் கொள்வதும் பொருந்தும். தலைக்கு: உருபு

## விநாயகக் கடவுள்

4. மாவேலை யாலமதை யடக்கித் தன்னுள்
மண்டலக மண்டமெலாம் வளர்ந்து தானோர்
காவேயின் முன்னுதித்த வரசிற் றோன்றிக்
கடம்புபுனை குருந்தினுக்குத் துணைய தாகித்
தூவேதந் தலைகாண்டற் கரிய தாகித்
துன்பமுறு பிறவியெனுந் துகள்சேர் வெய்யில்
ஆவேனைத் தன்னடியார் நிழலிற் சேர்த்த
அத்திதனைப் பத்திசெய்து முத்தி சேர்வாம். ௪

---

மயக்கம். கைக் கமலம் குவித்து - கையாகிய தாமரைகளைக் குவித்து; இங்கே கையைக் கமலமென்றது தற்புகழ்ச்சியன்று, பராசக்திக்கு முன் குவியும் புண்ணியம் உடைமைபற்றிக் கூறியது. அரு துங்கம் மலம் தீர்வாம் - பரிசுத்தம் இல்லாத மும்மலங்களினின்றும் நீக்கமடைவோம். அருந்துங்கம் என்பது துங்கமரிய என்பப் பொருள்பட்டது; அருமை இன்மை மேல் நின்றது, "அருங்கேடன்" (**திருக்குறள்**) என்பது போல.

இச்செய்யுளின் ஈற்றடியில் சொற்பின் வருநிலையணி வந்தது.

4. மா வேலை ஆலமதை அடக்கி - பெரிய கடலில் எழுந்த விடத்தைத் தம் திருக்கழுத்திலே அமையச் செய்து. உலகத்திலும் அண்டம் எல்லாவற்றிலும் வளர்ந்து. கா வேயில் முன் உதித்த அரசில் தோன்றி - சோலையிலுள்ள மூங்கிலிடத்து முன் ஒரு காலத்தில் தோன்றிய இறைவரிடத்தே அவர் திருக்குமாரனாக உதித்து. திருநெல்வேலியில் சிவபெருமான் மூங்கிற் புதரில் தோன்றினார் என்பது புராண வரலாறு. கடம்புபுனை குருந்தினுக்கு - கடப்ப மாலையை அணிந்த பிள்ளையாகிய முருகனுக்கு; குருந்து: "சூரழ விம்மியழுங் குருந்தை" (**கந்தரலங்காரம்**) துணை - சகோதரன். வேதம் தலைகாண்டற்கு அரியது - "உரைசெய் மறைக்குந் தலைதெரியாவொரு கொம்மை" (**புகலூரந்தாதி**) வெய்யில் ஆவேனை - வெய்யிலில் அமைந்து கிடக்கும் என்னை. அத்தி - யானை முகமுடைய விநாயகர்

இச்செய்யுளில் மா, வேல், ஆலம், வேய், அரசு, கடம்பு, குருந்து, அத்தி என்னும் மரப்பெயர்கள் ஒருங்கு தொனித்தன; இவற்றுள் வேயும் கடம்பும் மரங்களையே குறித்து நின்றன.

### முருகக் கடவுள்

5. தேவர்குலப் பெருங்கமல மிடுக்க ணான
திமிரமகன் றளியோடு சிறந்து வாழ
மாவலிசே ரவுணர்குலக் குவளை வாடி
மண்ணினிடைச் சுருங்கியிட வந்த பானு
தூவடிவேற் குமரேச னடிய னேன்புன்
சொல்லினுக்கு மிரங்கியருள் சுரக்கும் பெம்மான்
பூவடியா மிருபோது மூன்று போதும்
பூசைபுரிந் தன்பினொடு புகழ்ந்து வாழ்வாம். ரு

### வீரவாகு தேவர்

6. பொங்குகிரி களிற்றலைமை யோதும் போது
பொற்புடைய பொற்கிரிமுன் னிற்கு மாபோல்
தங்குதிறற் புகழ்வீரர் தம்மை யெண்ணின்
தானைமுன் னெண்ணவருந் தலைமை யாளன்
பங்கமிலா நீடிலங்கை மூடு மல்லின்
பகைவனவன் பகைவனவன் பகைவ னானோன்
மங்கலிலாப் புகழ்வீர வாகு வாய
வரிசிலைக்கைக் குரிசிலையாம் வணங்கல் செய்வாம். சு

---

5. தேவர் குலமாகிய பெரிய தாமரை. திமிரம் - இருள். அளியோடு - அன்பாகிய வண்டுகளோடு. மா வலி - மிக்க வன்மை. அசுரர் கூட்டமாகிய குவளை மலர்கள். பானு - சூரியன். முருகக் கடவுளைச் சூரியனாக உருவகம் செய்தார். பூவடி - பொலிவுபெற்ற திருவடி. போது - மலர், வேளை. பூசை புரிதல் மெய்க்கும் அன்பு உள்ளத்துக்கும் புகழ்தல் உரைக்கும் உரியன; திரிகரணத்தாலும் வழிபடுவோம் என்றபடி.

6. பொற்பு - அழகு. பொற்கிரி - மேருமலை. அல்லின் பகைவன் - சூரியன்; அவன் பகைவன் - சூரபன்மாவின் மகனாகிய பானுகோபன்; அவன் பகைவனானோன் - அவனை அழித்த வீரவாகுதேவர். வரிசிலைக் கைக்குரிசிலை - விரிந்த வில்லைத் திருக்கரத்தில் ஏந்திய தலைவரை.

## சைவசமயாசாரியர்கள்

7. வெங்குருவிற சற்குருவா யுதித்துக் கூடல்
மீனவன்மேல வினைதீர்த்தோன் விரைத்தாள் போற்றி
துங்கமுறு மலைகடலிற சிலைய தான
தோணியிலவந் தவனபாத தூளி போற்றி
எஙகள்பிரான் றனையிருளிற் பரவை வாசற்
கேவலகொண்டோன் பதப்பதும விருதாள் போற்றி
புங்கவர்சூழ் திருவாத வூரில் வந்த
புண்ணியனு ரிணையடிகள் போற்றி போற்றி. எ

## ஞானப்பிரகாச தேசிகர்

8. கடியதிரி மலவிருளைக் கடிய ஞான
கரமுதவ வெதிரெறிநது கண்டோா தங்கள்
வடிவுடைய விதயசரோ ருகங்க ளெல்லாம்
மலரவவ மதிநிலவு மழுங்கித் தாழப்
படியடியர் கண்டுதொழ மண்டு சீததிப்
பரன்கமலை யெழுநதவருட் பானு வெண்மைப
பொடியணியு மெழின்ஞானப் பிரகா சன்றன்
பூங்கமல மலரடிகள போற்றி போறறி. அ

---

7 வெஙகுரு - சீகாழி. கூடல - மதுரை மீனவன் – பாணடியன. வினை தீாததோன - திருஞானசமபநதா. விரை - நறுமணம. சிலையதான தோணி - அரசன கட்டிவிட்ட கலலாகிய தோணி, தோணியெனறது அககலலே தெபபமாக மிதநத அற்புததைதக கருதி நினறது. தோணியில் வநதவன - திருநாவுககரசர். ஏவல கொண்டோன் - சுநதரமூாததி நாயனா. பதபபதும இருதாள - அன்றலாநத செவவியையுடைய தாமரை போனற இரணடு திருவடிகளில், பதம் - பக்குவம. புஙகவா - தேவா. புணணியனா - மாணிககவாசகா.

8. ஞானபபிரகாசரைச சூரியனுக உருவகம செய்கின்றா.

திரிமல இருளை - மும்மலமாகிய இருட்டை. ஞானகரம - ஞானமாகிய கிரணஙகளை இதய சரோருகங்கள – இருதயஙகளாகிய தாமரைகள. அவ மதி நிலவு – அடியாரலலாத ஏனையவர்களுடைய வீணன அறிவாகிய நிலவு. படி - உலகம. கமலை - திருவாரூர். வெணமைப பொடி - திருநீறு.

### ஞானசம்பந்த தேசிகர்

9. சீரணியு நுதலின்விழி மழுமா னுகம
திருந்துமெரி பொருந்துவிட நெரிந்தி டாமல்
தாரணியன் பரையாள வவர்போல வந்த
சைவசிகா மணியெவாக்குந் தலைவ னெங்கோன்
காரணியு நெடியபொழிற கமலை வேந்தன
கருணைமழை பொழியுமிரு கடைககண் ணுளன்
பார்புகழு ஞானசம் பநத னெநதை
பரமனிரு சரணமலர் பரவி வாழ்வாம். க௯

### கச்சியப்ப சிவாசாரியர்

10. போதமுறு சூதமுனி புகன்ற காநதப
புகழ்க்கடலிற் படிநததன்கட பொருள தான
மேதகுவண் புனலருநதி வைய முய்ய
வெய்யதுயாப பிறவியெனும வெம்மை தீரத
தாதவிழ்பூம பொழிற்காஞ்சிக் குவட்டி லேறிச
சலதியமு தினைநிகாசெந தமிழ தான
காதன்மழை பொழிந்தவருட் கொண்ட லான
கசசியப்ப னிருபாத முசசி வைபபாம். க0

---

9. நெற்றிக்கண் முதலியவற்றை மறைததுச சிவபெருமானே ஞானசிரியராக எழுநதருளினரென்று கூறுகினறார். விழியும் மழுவும் மானும் நாகமும் எரியும விடமும் தெரிநதிடாமல். அவர்போல வநத - அநத அடியார்களைபபோல மானிட வேடம் தாஙகிவநத. கமலை - திருவாரூர். திருஞானசமபநதன் - தருமபுர ஆதீன முதல ஞானசிரியா.

10. கச்சியபப சிவாசாரியாரை மேகமாக உருவகம செய்கினறார். போதம் - ஞானம். காநதப புகழ்க் கடலில் - ஸ்காநத புராணமாகிய புகழ் மிகுந்த கடலில. பிறவியெனும் வெம்மை: " பிறவியெனுந துகள்சோ வெய்யில் " (4) என்றார் முன்னும். காஞ்சிக்குவட்டில் - காஞ்சீபுரமாகிய மலையில. சலதி அமுதினை நிகர் - கடலிற் பிறந்த அமுததனை ஒதத. கச்சியபபன் - கநதபுராணத்தை இயற்றிய கச்சியப்ப சிவாசாரியர்.

## நூல் வந்த வழி

(அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

11. நன்புவி யிடத்து மிக்க நைமிச வனத்து வாழும்
துன்பிலசீர் முனிவர் கேட்பச் சூதனங் குரைத்த காந்தம்
இன்புறு கச்சியப்ப னியம்பினன் றமிழா லன்னோன்
அன்புறு தமிழைப்போற்றி யறிந்தவா சுருக்கிச் சொல்கேன். கக

## அவையடக்கம்

12. கருக்கடன் முருக்கி முத்திக் கரைதரு காந்த நூலைச்
சுருக்கவே கலவி யில்லா த தொண்டனேன் றுணிந்த வாறு
திருக்கிலவான் முழுது மிங்கோர் செங்கையி லடக்கு வேனென்
றுருக்கர மில்லா னெண்ணு மூக்கமே போன்ற தன்றே.

13. ஆத்தமுஞ் சொல்லுஞ் சொலனு மாதிமா தாத லானும்
மெத்திய வனப்பு வேலோன் வியன்கதை யுறுத லானும்
பித்தனேன் றனதுபாட்டிற் பிழைகள்வந்திடினுந்தீர்த்திட்
டுத்தமர் கொள்வ ரென்னு முரத்தி னுரைக்கலுற்றேன்.

---

11. அறிந்தவா - யான அறிந்தபடி

12. கரு - பிறவி. முருக்கி - வற்றச்செய்து. தொண்டனேன் - ஏவலாளாக இருக்கும் தகுதி ஒன்றே உடையேன் திருக்கு இல் - மயக்க மின்றித் தெளிந்த. வான் - ஆகாசம் உரு கர்ம இலலான் உருவ முள்ள கை ஒன்றும் இல்லாதவன் ஊக்கம் - உள்ள எழுச்சி.

13. சொல்லினது பொருளும் சொல்லும் முறையே ஆதியும் மாதும ஆதலாலும், ஆதி - சிவபெருமான ; மாது - பராசக்தி, " சொல் வடிவாய்நின் னிடமபிரியா விமயப் பாவை, தன்னையுஞ்சொற் பொரு ளான வுன்னையுமே " (திருவிளையாடல், இடைக்காடன் 10), "சொல் லும் பொருளு மெனநட மாடுந் துணைவருடன், புல்லும் பரிமளப் பூங் கொடியே" (அபிராமியந்தாதி, 28.) மெத்திய வனப்பு - மிக்க அழகை யுடைய ; மாரனைக் குற்சிதம் செய்யும் பேரழகுடையோன் என்று " குமரன் " என்ற திருநாமத்துக்கு உரை வகுப்பா. உரம் - துணிவு.

14. தனக்கிணை தானே யான சம்பந்தன் கமலை வேந்தன்
கனக்கவே யென்பா லன்பாற் கருணைவைத் திடுத லாலே
உனற்கருங் காநதந் தன்னை யுரைததனன் சுருக்கி யல்லால்
எனக்குமிக் கதைக்கு நாடி னெததனை தூர மாமால். ௧௪

---

## புராண வரலாறு

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

15. விரிகின்ற கடறபுன லுண் டிருண்டு மின்னி
விண்மூடி வருங்கருமைக கொண்மூ வீறி
எரிகின்ற வொளித்தாவ மொளிப்ப வோஙகும்
எழினநதி வரையும்ப ரிமபா வாழச
சொரிகின்ற வெளளமிகு பாலி சூழநத
தொண்டைவள நாட்டுளது தொண்டைச் செவ்வாய்ச்
சரிகின்ற வளைததளிரககைம் மடவார மேவும்
தடமாட நெடுவீதித தமிழ்சேர காஞசி. ௧

16. இனனபரி சென்னவெழி லனன மேய
இறையாலு மெவராலு மியம்ப வொண்ணா
அநநகரின் வளர்பெருமை சொன்னா லென்னால்
அடங்குமோ வடஙகாதா லதன்கண் முன்னாட்

---

14. உனற்கு அரும - உனனுதற்கு அரிய. 'எனக்கும் இதற்கும் எததனை தூரம' எனபது உலக வழக்கு.

15. கொண்மூ - மேகம. தாவம - வெமமை. நதிவரை - நதி மலையில். உமபா - மேலே. இமபா - இவவுலகம. பாலி - பாலாறு. காமதேனுவின பாலே நதியாக வநதமையின பாலாறு எனனும பெயர பெறறது. தொண்டை - கோவைக கனி. தட மாடம் - விசாலமான மாடங்களையுடைய.

16. அனனம மேய இறை - பிரம தேவன. பொன் - திருமகள். திருமார்பன் - திருமால். கமடமாகி - ஆமையுருவங் கொண்டு. கச்ச

பொன்னவிருந் திருமார்பன் கமட மாகிப்
புரங்கடிந்த கடவுளடி போற்றி வாழ்ந்த
நன்னலஞ்சேர் கச்சபா லயமென் றேதும்
நாமவா லயமொன்று நண்ணிற றன்றே. உ

17. அனையசின கரமதனின் மதனை வென்ற
அமலனிரு கமலமல ரடிகள போற்றிப்
புனையுநறுந் துழாய்மௌலிக் கடவுள தந்த
போதனுறு போதுவளா போத மேவும்
முனைவர்பல ரடைந்தவனசெம் பதங்கள் தாழ்ந்து
முண்டகமேன் முதலவவொரு முதுசீர்க் கானம்
தனையினிதி யாஙகடவம் புரிந்து வாழச்
சாற்றுகென வனையானித தன்மை செய்வான். ௩

18. ஒருதருப்பை யெடுத்துவனைத தவனி மீதில
உருட்டியிது நின்றவனத துறைதி ரென்ன
அருமுனிவ ரெலலோருமப் பின்ன ரேக
அதுசென்று துன்றியவோ ரடவி யூடே
மருவியவ ணின்றிடவங் கிருந்தா ரன்ன
வனநைமி சாரணிய வனமென லுகப்
பொருவிலபுகழ் மாதவரோர் வேளவி யாங்கே
புரிந்தமலம் பொருந்தியினி திருந்த போது. ௪

---

பாலயம - திருமால கூர்மாவதாரம எடுத்தபோது சிவபெருமானைப பூசித்த தலம ; கசசபம - ஆமை.

17. சினகரம - கோயில மதனை வென்ற அமலன - சிவபெருமான். துழாய மௌலிக கடவுள தந்த போதன உறு போது - திருமால் நாபிக் கமலத்தின் வழியே வெளிபபடுத்திய பிரமதேவன் வந்த சமயத்தில். போதம் - அறிவு. முனைவர் - முனிவா. அவன - பிரம தேவனது. முணடகம - தாமரை. கானம - வனம. தவம புரிந்து வாழக் கானந்தனைச சாற்றுக.

18. துன்றிய - சேர்ந்த. ஓர் அடவியூடே மருவி - ஒரு காட்டில் பொருந்தி. அமலம் பொருந்தி - மலநீக்கத்தைப பெற்று.

19. சூதமுனி யீதறிந்து வரலு நேர்போய்த்
தொழுதனரங் கிழுதனலிற ரேய்நதா லொப்ப
மேதகுமன் புளமுருக முகமன் கூறி
வீறுதம தாச்சிரம மேவச சேர்ததிச்
சோதிமணிப் பெருமபீட மொன்று நாப்பண்
துலங்குறவிட் டதன்மீது துகளி லாவம்
மாதவனை யினிதிருததி யருத்தி யோடு
வல்லையிலாக் கியமுதல வழங்கி ஞரால். ௫

20. மறறதுபின் பின்னனெடுஞ சடிலச் செனனி
மன்னியமா தவரனையான மருங்கு வைகிப
பறறலர்தம புரமெரிய நகைதத செவ்வாய்ப்
பாலவிழித தனிககடவுள பால ஞன
செற்றநெடுங் கதிர்வேறகைப பெரியோன் காதை
சிறியோமிங் கறியவுரை செய்வா யெனனக்
கொற்றமுனி யதுவினவி விழிகள வெள்ளம்
கொள்ளவவ ரோடின்ன கூற லுறருன். ௬

21. ஒன்னலார் சோரிகுடித தொளிருஞ் செவ்வேல்
ஒருவனது பெருஙகாதை யுரைபபோா கேட்போா
முனனெலாம புரிநதவினை யனைததுந தீாதது
முததிதரு மதுகேட்ப முயன்றீா மன்றே

---

19 இழுது - நெய. அனபு உளம உருக - அனபையுடைய உள்ளமானது உருக முகமன - உபசார வாாதததைகள. மணி - மாணிக்கம. துலங்குற இட்டு. அருததி - ஆரவம. வல்லையில் - விரைவில்.

20. மறறதுபின் - அதன பிறகு, மற்று - அசை நிலை. பின்னல் நெடுஞ் சடிலம - பினனிய நீண்ட சடை. அனையான் - சூத முனிவர். பால விழி - நெற்றிக கண் செற்றம - கோபம. கொற்றமுனி - தவத் தில வெற்றியையுடைய சூத முனிவர், "ஐமபுலனும வென்ருனறன் வீரமே வீரம்" ஆதலின புலனை வெனறு நின்ற முனிவரைக் கொற்ற முனி என்ருர். அது வினவி - நைமிசாரணிய முனிவாகள் வேண்டு கோளைக் கேட்டு

21. ஒன்னலார் சோரி - பகைவாது ரததத்தை. காதை தீர்த் துத் தரும் என்க பின்னல் - பின்னிய சடை. பேசுகேன -

பின்னலான் மறைந்தபிடர் முனிவீர் நீவிா
  பெருங்காத லொடுகேண்மின பேசு கேனென்
றின்னலா னவைநவைக ளெவையும் போக்கும்
  ஏதமிலசீர்ச சூதமுனி யியம்ப லுற்றான். எ

22. முற்காலத தரனபுகன்ற மறைகள யாவும்
  முதலமுடிவு தடுமாற முனிவா தேவா
நற்காருந தரையிருநத மாக்க ளெல்லாம
  நலலறிவு நீஙகிமய லண்ணி னாராய்
அறகாள கண்டனையு மறநது வீறும
  அறமாற்றி மறமாறற வாறறன் மாயோன
விறகாமா் நெடும்புருவ வாணி கேளவன்
  விண்ணவர்சூழ் தரக்கயிலை மேவி னால் அ

23. விண்ணவாகண் மகுடமுடி தடவுரு செநதாள
  விறனநதி தேவரொடு விமலன் பாலயாம்
நண்ணியது புகன்றருள வேண்டு மென்ன
  நம்பனெதி ரடைநதிறைஞ்சி நவிற்ற லோடும்
தண்ணருளெம பெருமானிங் கவரை வலலே
  தருதியென மீணடுநெடுஞ் சாரஙக பாணிக்
கண்ணனமுத லிமையவரை விடுப்ப நாதன்
  கழறொழுது பணிந்தின்பங் கலநது நின்றா. கூ

---

சொலவேன இனனலானவை - துன்பங்கள. நவைகள - குற்றங்கள.

22. நற்கு ஆரும் - நன்மை நிறைநத. மயல் - மயக்கம். அல்காளகண்டன் - இரவைப போனற நீலநிறத்தையுடைய கழுதையுடைய சிவபெருமான். அறம மாற்றி மறம ஆற்ற - தாமதை நீககி அதர்மத்தைச் செய்ய. காமா் - விருபபம, அழகுமாம் வாணிகேளவன - பிரமதேவன.

23. விமலன - சிவபெருமான். நவிற்றலோடும் - தேவர்களது வருகையைச் சொன்னவுடன. வல்லே - விரைவில். சார்ங்கபாணிக் கண்ணன் - சார்ங்கம் என்னும் விலலை ஏந்திய திருக்காதையுடைய திருமால்.

24. நின்றுபுகழ் மான்முதல்வா னவரை நோக்கி
நிமலனும் தாசுபுரி நெறிக ளெல்லாம்
நன்றுபெற நடந்தனவோ வென்ன மாயோன்
நாதவுன தின்னருளி னடந்த விந்நாள்
இன்றுமெமக் களித்தருளவ தொன்றுண் டன்ன
தியம்புவனம் புவிமாந்த ரெவருந் தென்றற்
கன்றுலவுங் குளிர்சோலைக் கயிலை மேய
கடவுணினை மறந்துமறங் கருதி னால். ௧௦

25. நற்போத மவர்படைத்து நினது பாதம்
நணுகும்வகை யருள்சிறிது நல்கு வாயென்
றற்போடு மொழிந்திடலு மொழியாச் சீர்த்தி
அருளாள னொருகலையோ டவனி மேனீ
பொற்போடு வியாதனென வுதித்து வேதப்
புகழ்க்கடலை நான்குவகை புரிந்தி யாரும்
கற்போலுந் திரண்டபுயப் புயலே யின்பக்
கதியடையும் படிபுகறி கடிதின் மாதோ. ௧௧

26. ஓங்குமறை யுணர்ந்துமுளந் தேறு தாரும்
உணராரு மையமகன் றுய்யு மாறு
பாங்குறுமொன் பதிற்றிரட்டிப் புராண முண்டு
பண்டுநாம நந்தியொடு பகர்ந்தா மன்னான்
தாங்குபுகழ் படைத்தசனற் குமர னென்னுந்
தவமேவு முனிதனக்குச் சாற்றி னானே
வாங்குதிரைக் கடலுடுத்த புடவி மீது
மற்றவன்பாற் கேட்டினிது வாழ்தி யென்றான். ௧௨

---

24. தென்றற்கன்று - இளந்தென்றல். மறம் - அதர்மச் செயல்கள்.

25. நற்போதம் - மெய்ஞ்ஞானம். "அவனரு ளாலே யவன்றாள் வணங்கி" (திருவாசகம்) என்று கூறுதலின், 'நினது பாதம் நணுகும் வகை அருள் சிறிது நல்குவாய்' என்றார். யாரும் கதி அடையும்படி. வியாதன் - வியாசன், வேதத்தை நான்காக வகுத்துப் பிரித்தலின் இப்பெயர் பெற்றார். புகறி - சொல்லுவாயாக.

26. உணராரும் - வேதத்தைத் தெரிந்துகொள்ளாதவர்களும். வாங்கு திரை - வளைந்த அலைகள்.

27. இப்பணியை யப்பணியும் பணிசேர் சென்னி
இறையருள முடிமேற்கொண் டிறைஞ்சி யாங்கே
கைப்பதுமங் குவித்துவிடை கொண்டு நீங்கிக்
கடிதுதன திடத்தடைந்து கடைந்த வேற்கண்
துப்பனைய துவரதர வாணி கொங்கைச்
சுவடுபடும் புயனுதிச சுராகள யாரும
ஒப்பகறம் பதம்புகுத விடுத்து வைகி
ஒருகலையோ டுதித்திடவங் குனனி ஞலை. கஎ

28. புண்டரிகக் கடவுள்வழிப் பராச ரப்போப்
புகழ்மேவு முனிவனிமம் பொழியும் போது
தண்டரளந் திரையிறைக்குங் கங்கை தன்னில்
தன்னிகர்யோ சனகந்தி தடந்தோள் தோய
வெண்டரங்கப் புவிபோற்ற வவாபாற ரேனறி
வெதிரிகமா வனத்திருந்து வேதம யாவும
பண்டையுணர் வாலுணாந்தி யாரு முய்யப்
படிமிசைமா ணுக்காராற பரபபி ஞலை. கஅ

29. ஆங்கதுபின் சனற்குமரன் பாலீ ரொன்பான
ஆனபுரா ணங்களுணாந் தடியேற் கீந்து
தீங்ககல வினைவோர்க்கு முரைத்தி யென்று
செப்பினு னனவற்றுட் டிங்கள் வேணிக்

27. அபபு அணியும - கஙகையை அணிநத. பணி சேர் - பாம்பை ஆபரணமாகச சேர்தத. இப பணியை அருள. துபபு - பவழம. புயன - பிரமன்.

28. புணடரிகக் கடவுள் - பிரமதேவன். அவன் வழிவந்த பராசர முனிவன் தன் நிகர் யோசனகநதி - அழகில தனக்குத்தானே ஒத்த யோசனகநதி என்பவள. பராசர முனிவருக்கும் யோசனகந்திக்கும் பிறநதவா வியாசர். வெதிரிக மாவனம - பதரீவனம; இலநதைக் காடு வேதம யாவும உணர்ந்து பரபபினுன் என்க.

29. ஆங்கதுபின - அதன் பிறகு. அடியேற்கு ஈநது : சூத முனிவர் தம்மைக் குறிக்கினரா. வேணியையும பாகததையும் உடைய இறை, சிவபெருமான்.

கோங்கலர்மென் முலைபாகத் திறைக்கீ ரைந்து
  கொலைததிகிரிப் படையோற்கு நான்கு கோலப
பூங்கமலத் தவிசிருநதோற் கிரண்டு செநதீப்
  புகழ்ததபனற் கோரொன்றுப பொலிநத வன்றே. ௧௫

30. புரமூன்று மெரிககளிததோற் போறறுஞ் சைவம்
  பொருவில்சீர்ப் பவிடியமே பொற்பு மிக்க
வரமாரு மாாக்கண்ட மிலிங்கங காநதம்
  வராகமே வாமனமே மசசங கூாமம்
பிரமாணட மிவைகளசிவ புராண மாயோன்
  பெருங்காதை காருடநா ரதமே விண்டாங்
கருண்மேவு பாகவத மாகு மெனப
  அயன்காதை பதுமமே பிரம மாமால. ௧௬

31. கூறுபிர மகைவாதத மிரவி காதை
  கொடுநதழலின் கதையாக்கி நேய மாமென்
றாறில்பரன் கதைபததிற் பததர் போற்றும
  உயாகுமரன் கதைசுருக்கி யுரைததா னென்ப
மாறிலபுகழ் வதரிகமா வனதது வைகி
  வாதரா யணனுகி மறைகள் யாவும
வீறுபெற நானகுநிலை புரிநத வாறருல் [ன்.
  வியாதனெனும பெயாபடைததோன வியன்மா ணுக்க

29. திகிரிபபடையோன் - சக்கராயுததைதயுடைய திருமால். செந்தீக்கு ஒனறு, தபனனுக்கு ஒன்று ; தபனன் - சூரியன.

30. அளிததோனே. வரம - மேன்மை. சிவபுராணங்கள் சைவம், பவிஷயம, மாாக்கண்டேயம, லிங்கம, காநதம், வராகம், வாமனம், மச்சம, கூாமம், பிரமாண்டம எனனும பதது ; திருமாலைபபற்றிய புராணஙகள காருடம, நாரதம, விஷ்ணு புராணம, பாகவதம் எனனும் நானகு. விணடு - விஷ்ணு. பிரமனுக்குரியவை பதும புராணம், பிரம புராணம என்னும் இரணடு.

31. இரவி காதை - சூரியனுக்குரிய புராணம அககினிக்கு உரிய புராணம் ஆக்கிநேயம். வாதராயணன : பாதராயணன் என்பதன திரிபு , பதரிவனததில் இருநதமையின் வியாசா இபபெயர் பெற்றா. எனறு - எனறு புராண அடைவுகளைக் கூறிவிட்டு. குமரன்

32. வளங்குலவு மலையரையன் மகளா யம்மை
வளர்ந்தசெயன் முதலாக மன்னுஞ் செவ்வேள்
விளங்குசுர ராசளித்த கொம்பி னோடும்
வேடர்குலக் கொடியோடும் வேழக் கூற்றின்
களங்கமில்செக் காசத்தவிசி லிருந்த திருக்
கவினமுனிவன் ரருகையாகக் கழற லோடும்
உளங்குளிர்ந்து முனிவோர்கள் விரிவா வெங்கட்
குரைத்தருள வேண்டுமென வுரைக்க லுற்றான். கஅ

---

## முதலாவது

# உற்பத்தி காண்டம்

(எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

33. திருமருவு கயிலைமிசைக் கனக மான
சினகரஞ்சேர் மண்டபத்துச் சிறந்த சீயப்
பொருவிலெழி லணைமீது கணைமீ னாட்டப்
பூவையொடு புரமெரித்தோன் பொருந்து போதில்
முருகுமலர்க் குழலுமையா ளெழுந்து நாதன்
முண்டகத்தா ளிணைவணங்கி முன்னா நின்று
குருகுவளைக் குலநெருங்கு கரங்கள் கூப்பிக்
குமுதவாய் திறந்திணைய கூற லுற்றாள். க

---

கதை சுருக்கி உரைத்தான் - கந்தபுராணத்தைச் சுருக்கிச் சொன்னான்: மாணாக்கன் - சூதமுனிவர். மாணாக்கன் என்று, உரைத்தான்.

32. சுரர் அரசு - இந்திரன். கொம்பு - தேவயானை. வேடர்குலக் கொடி - வள்ளியம்மை. வேழக்கூற்று - சிங்கம். செக்கர் - செம்மை. தவிசு - சிங்காதனம்

33. சினகரம் - கோயில். சீயப்பொருவில் எழில் அணை - ஒப்பற்ற அழகையுடைய சிங்காதனம் கணைமீன் நாட்டம் - அம்பையும் மீனையும் போன்ற கண்கள். முருகு - நறுமணம். முன்னா நின்று - முன்பாக நின்று. குருகு வளைக்குலம் - சங்காலாகிய வளைக்கூட்டங்கள்.

34. இற்றைவரை வரைவளைத்த கரததோய் நின்னை
எண்ணுத தக்கன்மக ளென்னு நாமம்
பெற்றனன்மே லதுபரிப்ப வெருவி னேனப்
பெயரகல வருடியெனப் பேச லோடும
தற்றுபொழி லிமயநெடுஞ் சைல வேந்தன்
தன்மகளா யுனைப்பெறுவான் றவஞ்செய் கின்ருன்
மற்றவன்பால வளர்நதிடுதி வநதி யாமபின
மணத்துமென விடைகொடிம மலையிற் சேரநதாள். உ

35. அங்கொருபூந தடததினிடைக கமல மீதில
அமலநா யகிகுழவி யாகி மேவ
மங்கைதனை யாண்டுதவம் புரிநது நின்ற
மலையரையன் கண்டெடுதது மகிழ்நது வானேருய்
துங்கமனைக கொடுபோகி மேனை யான
துணைவிகரத தளிபபவவ டொழுது வாங்கிப்
பங்கமற வளாத்தனளே யாண்டு செல்லப
பரனையுற வம்மைதவம பண்ண வெண்ணி. ந

36. வென்றியுறு தநதையொடு மிநத வாறு
விளம்புதலு மலையரையன் விளமபு வானீ
இன்றுதவம் புரிநதிடவே பொருதுன் மேனி
இளம்பருவ மிதுதவிர்தி யென்ன வன்னை

---

34. வரை வளைதத - மேரு மலையை வில்லாக வளைத்த. தக்கன மகள் : தாக்ஷாயணி. பரிபப - தாங்க. தற்று பொழில் - செறிந்த சோலைகளையுடைய. மணத்தும் - உன்னை மணம செய்துகொள்ளு கிருேம் என - என்று சிவபெருமான் சொல்ல. விடை கொடு - விடை பெற்றுக்கொண்டு இம மலை - இமாசலம்.

தககன் சிவபெருமானுக்கு ஆகுதி அளிக்காமல் யாகம் பண்ணியவன் ஆதலின் ‘ நினனை எணணுத தக்கன ’ எனருள.

35. ஆணடு - அங்கே. மேனே - பருவதராஜன மனைவி. பரனை உற - சிவபெருமானை மீண்டும அடைய.

36. உன மேனி பொருது, இது இளம்பருவம். தவிர்தி - இநத எண்ணததை விட்டுவிடுவாயாக. எனன - எனறு பருவதராஜன

மன்றலுறு கொன்றைமுடிப் பரமன் காப்பன்
மறுத்தறையே லெனவிசைந்து மாத ரோடு
குன்றிலொரு பாங்கர்தவச சாலை யூடு
கோதிறவம் புரிநதிருபபக் குயிற்றி னுனல். ௩௬

37. செல்லாரும் பொழிலிமயத தரனைச சேரத
திருநதுதவம புரிநதுமையா ளிருநத காலை
எலலாருந தழனுதற்கட் பெருமான் விண்ணோர்
எலலாரும் பரவவர மீநத வாற்ருல
விலலாருங கனகநெடு மாட நீடு
வீதிமகேந திரமூதூா மீது வெம்மை
அலலாருங கடுவனைய தகுவர் சூழ
அரசுபுரிந திருஞ்சூர னமாநதா னன்றே. ௩௭

38. சொற்றருமக் காலததின் ஞாலத தின்பால்
தொல்லைமறைப் பொருளினைமுன் சோதி பாங்கர்ப்
பெற்றசன காதிமுதன் முனிவா நாலவர்
பெருநதவங்கள பலபுரிநது பின்னு முன்னும்
வெற்றிநெடுங் கயிலையெனுஞ் சைல மேவி
வீறுமெழி னநதிவிட விடஞ்சோ கண்டக்
கொற்றவன்ற னடிவணங்கி முடிமேற் செங்கைக்
கோகனதங் குவித்திணைய கூற லுற்ருர். ௩௮

---

சொல்ல. மனறல - நறுமணம. மறுதது அறையேல என - என்னுடைய விருபபததை மறுததுச் சொலலற்க எனறு அமபிகை கூற. இசைநது - பருவதராஜன் இணங்கி குயிற்றினன - அமைத்தான்.

37. செல - மேகம. எல - ஒளி. வில - ஒளி. அல - கருமை கடு அனைய தகுவா - விடததைப போன்ற அசுரர்கள.

38. தொல்லை - பழமையான. சனகாதி முதல முனிவா - சனகா முதலிய முதனமை பெற்ற முனிவர்கள், சனகா, சனந்தனர், சனாதனா, சனதகுமாரர் ஞாலததினபால் தவஙகள் புரிநது. பினனும - அதன மேலும். முனனும் - அடியாாகள நினைக்கின்ற.

39. அருமறையின் பலபொருடோர்ந் திநநாள் காறும்
அடியரேம் புநதிவிரிந தலைநத தீண்டுப்
பொருவிடையோ யறிவடங்கி யாங்க ளுய்யப்
புரிந்தருள வேண்டுமெனப புகற லோடும்
கருமறலி யுரங்கிழிதத பதுமச செநதாட
கருணைநெடுங் கடலிருமின் காமர் நன்னூல்
மருளுறுநும் முணர்வொடுங்க வுரைப்பா மென்ன
மன்னுமவன திருத்தாண்முன் னிருநதார் மன்னே. எ

40. சங்கரன்முன் னவரிருபப நநதி தனைநத
தநதிதனை யுரித்தகரத தலைவ னோக்கிப
புங்கவர்க ளெவர்வரினும் விடுவா யலலை
போாமதவேள வரினவிடுதி போதி யெனன
அங்கவனே கினன்முனிவா மகிழ்நது கேட்ப
ஆகமததின் பொருண்மூன்று மாதி யோத
இங்கெமது புந்திவிரி வொடுஙக ஞானம்
இறைவபுகன் றருளவாயென் றியம்பி னுரால். அ

41. என்றிடலு நகைததருளி யாது மாங்கே
இசைததிலனப் பொருளிருப்ப திவ்வா றென்று
துன்றுநெடுஞ் சடைமுனிவாக குணர்த்து மாற்றால்
துலங்குமொரு கரமுரத்திற் றோயச் சேர்த்தி

---

39. புநதி - அறிவு. புரிநதருள வேணடும் - விரும்பித் திருவருள் செய்யவேணடும். கருமறலி உரஙகிழிதத - கருமையான யமனது மார்பைத் திருவடியால் உதைத்துக் கிழிதத; வலியைக் கெடச செய்த எனலுமாம். உணர்வு ஒடுஙக நன்னூல உரைபபாம்; நன்னூல் என்றது சிவாகமத்தை

40. நநதி தன்னை நோக்கி புங்கவாகள - தேவாகள. போர் மதவேள் - போர் செய்யும மன்மதன். பொருள மூனறு - பதி பசு பாச இலக்கணம். ஆதி - சிவபெருமான். ஞானம - ஞானோபதேசம.

41. உரததில் - திருமார்பில. தருவா - அரசா. ஞான முததிரையாம் குறி காட்டி - சினமுததிரையாகிய திருக்காககுறிபபைக்

முன்றகுவர் புரமெரித்த பரமன் ஞான
முததிரையாங் குறிகாட்டி முனிவ ரேபோல்
ஒன்றொருநுண் கணபபொழுதி யோக மாகி
உறைநதனனங் கவரருள்பெற் றுய்யு மாறே. ௯

42. பிளளைசசந திரமவுலிச சிறுமான் செங்கைப
பெருமானிவ வாறிருபபப் பெருமை சான்ற
உளளததன பினரானற் றவருந தததம
உணாவொடுஙகி ஞானமுணாந துறும்பே ரின்ப
வெளளததுட படிநதுசெய லொன்று மின்றி
மேவினரோ ரிறைபபோது விமலற காய
தளளற்றெண டிரையுடுதத புடவி மாககட்
கமராதமக கெண்ணி லுக மாயிற றம்மா. ௧0

43. விரிபதுமத திருமருமப் பெருமா னுதி
விணணவாககு மணணவாககும் வேநத னுகிப்
பொருவிலவ ருயிர்க்குயிரா யுணாவு நலகும்
பொருவிடையோ னுமையோடு பொருநத லின்றி
அருமுனிவா பொருட்டாக யோகி போல
அமாதலா லனைவோரு மரிவை மாதோள்
மருவிமுயங குதலின்றி யிருநதாா கஞச
மலாவிதிக்கும் விதிக்குமுறை மாறிற றன்றே. ௧௧

---

காட்டி. முனிவரேபோல - மௌனததையுடைய முனிவர்களைப் போல, மௌனமுடைமையின் முனிவரெனனும பெயா வநதது.

42. பிளளைச் சநதிர மௌலி - பிறைமதியை அணிநத திருமுடி. ஓர் இறைபபோது - ஒரு கணபபொழுது அளளல் - சேறு. சிவபெருமான் மோன நிலையில் இருநத ஒரு கணம் உலகததிலுள்ளாருக்கும் தேவாகளுக்கும பல யுகங்களாக அமைநதது.

43. விரி பதுமத திருமருமப பெருமான - மலாநத தாமரை மலரில் எழுநதருளியிருக்கும் திருமகளை உடைய மார்பைபபெறற திருமால். கஞசமலா விதிக்கும் - தாமரை மலரில வீறறிருக்கும பிரம தேவனுககும். விதிககும் முறை - சிருஷ்டி செய்யும் முறைமை.

44. இப்படியிப் படிவானத திருநது வாழும்
எவ்வுயிரு முறுஙகாலத திருணஞ் செய்க்கும்
துப்பவுணர் பெருந்தகையாஞ் சூரன செய்யும
துயரிஞ லுயாதுறக்கங் துறநது நீங்கி
கைப்படுவெங் குலிசநெடும் படையான் முனனம்
கனவரைக ளிறகறுத்த கடவுள கோல
மைப்பொலியு நயனவயி ராணி யோடும
வானவரோ டும்புவியின மருவி ஞலை கஉ

45. வெள்ளிவரை யடைநதரனை வணஙகு மாறு
வேலையலா திருநதிடலும் வேலை நஞசம
கொள்ளுமடன மிடறுடையோன குனிதத செம்பொற்
கோதண்ட வேதண்டங கூடி யாஙகே
களஞுகுதாச் சயநதனெடுங கடவு ளோரைக்
காரவுணன் சிறைபுரிநத கடுஞ்சொற கேட்டுத
தளருமதற கரியதுயா கொண்டு நாதன்
தாட்கமல மலர்நினைநது தவமபு ரிநதான். கங

46. புரிநதிடலு மிறைதவள விடைமேற் றேன்றிப
பொருவிறவத திளைததனைநீ புநதி தன்னில
விருமபியதே தெனவறியான போனறு கேட்ப
வெஞ்சூர்க்காய்ந் தெமையாள வேண்டு மென்னத

---

44 இபபடி இவ்வாறு, இநத உலகம். படியிலும் வானத்திலும் இருநது வாழும உயிர். நஞசு ஏய்க்கும அவுணா: "அல்லாரும் கடுவினைய தகுவா" (37). துபபு - வலி. அவுணா பெருநதகை - அசுரா தலைவன். குலிச நெடும் படையால - வசசிராயுததிஞல. கடவுள் - இநதிரன. அயிராணி - இநதிராணி

45. அரனை வணங்குமாறு வேலையலாது இருநதிடலும - சிவ பெருமானை வணஙகுமபடியாக ஏறற செவவி இலலாமல இருந்தமையாலே. குனிதத - வளைதத செமபொற கோதண்ட வேதண்டம - வில்லாகிய செம்பொன் மலை, மேரு. சயநதன் - இநதிரன மகன்.

46. தவள விடை - வெண்ணிறம பெற்ற இடப வாகனம். தவதது இளைத்தனை - தவததிஞல் இளைபபை அடைநதாய. சூராக்

திருந்தலனால் வருந்தலெல்லாந் தக்கன் வேள்வி
சேர்ந்திருந்த தீமையெனச் செப்பி நந்தம்
உரந்திகழ மகனொருவ னவுணர்சசாடி
உமைபபுரப்பா னெனவருளா லுரைத்துப் போனான்.

47. ஆங்கமல னீங்குதலு மமரர் கோமான்
ஆகுலமு மின்பமுங்கொண் டனைய வெற்பிற்
றாங்குபுக ழயிராணி யெனனு நாமத்
தனமனைவி பொன்மனைவி தனபால வைததுத
தேங்கமழுங் கமலநிதிப் பொருட்டின மன்னும்
சென்னிநான குடையானைச் சேர்ந்து தாழ்ந்து
தீங்குபெறு சூர்புரியுந் துயரு நாதன்
செப்பியது மவனோடு செப்பி னானால. கரு

48. போயமரர்க் கிறையுரைதத வாறு தேர்ந்து
புகுந்தபடி முகுந்தனுககுப் புகல வெண்ணித
தூயகம லத்திருந்து திருந்து வேதன்
சுரர்குழவு மகவானுஞ் சூழ வேகி
மாயனுட னரனயோகத திருந்த வாறும
வானவர்க டானவரால வருந்து மாறும
மேயபல வுங்கூற வரியு மோர்ந்து
விதிபத்தும முகநோககி விளமப லுற்றான. கசா

49. எம்பெருமான் முனிவோர்கட் காக யோகம்
இருந்திடுதல தவிர்ந்தருளி யிமய வெற்பில்
அம்பிகையை மணமபுரிந்தோர் சுதனை நலக
அரன்பான்மா ரனைவிடுகென றறைத்த லோடும

காய்ந்து - சூரபதுமனை அழித்து. திருந்தலன - பகைவன். உரம் - வன்மை அவுணர்ச சாடி - அசுரர்களை அழித்து.

47. ஆகுலம - துக்கம், தக்கன வேள்வியிற கலந்துகொண்ட தீமையை நினைந்து எழுந்தது. தன மனைவியைப பிருகஸபதியின் மனைவியினிடத்து ஒப்பித்து. பொன் - வியாழபகவான்.

48. அமரர்க்கிறை - இந்திரன. மகவான - இந்திரன. விதி - பிரமதேவன.

815. அந்த நாகத் தரசு புரிந்திட
இந்தி ரற்கங் கெழின்முடி சூடுவித்
தந்தி வான்மதி யானன மாதொடும்
எந்தை யங்ங னிருந்தன னெண்ணினுள். கக

816. தேனு லாந்தொடைத தோமிசை யேறியே
வான மேன்மக வானை யிருததியே
சேனை வீரருந தேவியுந தானுமாய்க்
கான மேவு கயிலையின் மேவினன். கஉ

817. மங்கை யீசன் மகிழுப பணிந்தெழுந
தங்க ணினறு மருள்விடை கொண்டுசீா
பொங்கு கந்தப பொருப்பினின மேவினன்
துங்க வீரருந தொனமையின் வைகினா. கங

818. இன்ன பான்மை யிருந்திட வும்பாகோன்
பொன்னி னுடு புரந்தர சாற்றுழி
மன்னின் மின்னிகர் வாழ்க்கை துறந்திடாத்
தன்னை நோகதி சாாந்திட வெண்ணினன். கச

819. துறக்க வேந்த றுறக்க நினைந்ததைச்
சிறக்கு முமபாக டேசிக னோந்துவந

---

815. நாகதது - தேவலோகததில. அந்தி வாலமதி ஆனனம் மாதொடும் - மாலையில தோன்றும் தூய சந்திரனைபபோன்ற திருமுகததையுடைய தேவயானையோடும. எண இல் நாள் இருந்தனன.

816. தொடை - மாலை. வானமேல - தேவலோகததில். மக வானை - இந்திரனை. கானம - சோலை', பாட்டுமாம.

817. மங்கையும ஈசனும் மகிழுமபடி. கந்தப பொருபபினில் - முருகக்கடவுளுக்குரிய கந்தகிரியில. தொன்மையின - பழமையைப போல.

818. உமபாகோன - இந்திரன. புரந்து - பாதுகாதது. அரசு ஆற்றுழி - அரசாட்சி செய்யும காலத்தில. மன இல் - நிலையிலலாத. மின நிகா வாழ்க்கை - மின்னைபபோன்ற போக வாழ்வை தனனை நோ கதி - முத்தி.

தறக்க ருத்துல காயத மாமதத
துறத் திருப்பின னூழ்வினை போலவே. ௨௫

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

820. அன்னவ னுரைதத பொய்யைமெய் யெனக்கொண்
டறிவிலா மகபதி சயநதன்
தன்வச மாக வரசினை நிறுவிச
சசியொடு கலநதுவீற றிருப்ப
மன்னர சியறறுஞ சயநதனங கொருநாள
வானவா குருவினை நோககி
இன்னநா ளளவுஞ சூரனை மெலிநத
தெனகொலயா மெனவவ னிசைப்பான. ௨௬

## ஆருவது

## தக்ஷ காண்டம்

821. முன்பொரு பகலி லிமையவர் பரவ
முளரியங் தவிசிடை முதலவன்
இன்புற விளஙகுஞ சததிய வுலகத
திருநதன னிருநதிடு மேலவைக்

819. துறக்க வேநதல - இநதிரன. உமபர்கள் தேசிகன் - பிருகஸபதி. ஓர்நது - நினைநது. அற கருதது - முழு மனமும். உலகாயதமாம் மததது உற ஊழ்வினை மதியைத திருபபுவதுபோலத திருபபினன்.

820. அனனவன - பிருகஸ்பதி. மகபதி - இநதிரன. இநதிரன சயநதனிடம அரசாட்சியை ஒபபிதது இநதிராணியோடு அளவளாவி இனபுற்றிருநதான.

821. ஒரு பகலில - ஒரு நாளில. முளரி யம தவிசிடை முதல்வன - பிரமதேவன. சததியவுலகம - பிரமலோகம ஏல்லை - சமயததில அனையான் தனையா - பிரமபுததிரர்கள வாணி - கலைமகள. புயததோன - பிரமன். வினவும - கேட்கலானன.

கொன்பொலி யனையான் றனையரோர் பதின்மர்
குழுவினிற் றக்கனுங் குரிசில்
மின்பொலி நுசுபபு வாணிசோ புயத்தோன்
வியன்முக நோககியே வினவும். க

822. மொய்வள ரமராக கிறையவ ளுகி
மூவரி லுயாநதவ ளுகி
எவவகை யுயிாக்கு முயிரென விருக்கும்
இயலபினேனை யாவனென் றிசைப்ப
மைவள ருருவக குரிசிலும் யானும்
மாறுகொண டிழியழல வடிவாய்ச
செவ்வொளி பாபபி யெழுநதுவா னிமிர்நத
தேவனே யதிகமாந தேவன். உ

823. என்றய னிசைப்ப வொருதொழில புரிவான்
இருதொழில செயுநமக கிறையாய்
வனறிறல படைதத தென்கொலோ வெனலும்
மைநதகே ளெங்களைச் சுரரைத்
துன்றுபல லுயிரை யீறறின்மாய்த் திடலாற்
றோறறுவித தவனவ னன்றோ
அன்றியு மவனே யெஙகளபா லிருநதீண்
டளித்தலும புரத்தலு மருள்வான். ங

822. மைவளா உருவக்குரிசிலும - கரிய திருமேனியை உடைய திருமாலும். மாறு கொணடிழி - நானே பெரியவன என்று வாதம் செய்தபொழுது அழல வடிவாய் - நெருபபுருவமாகி. தேவனே - சிவபிரானே. அதிகம ஆம - எலலாரினும உயாவாகிய.

823. ஒரு தொழில புரிவான - அழிததலாகிய ஒரு காரியத்தைச் செய்பவன். இறையாய - தலைவனுய். திறல் - வலிமை. மைநத - புதல்வனே ; தக்கன பிரமதேவனுக்குப் புததிரன் இறுதியின் மாய்பப வர் எவரோ அவர்தாமே மீண்டும் உணடாககவேணடுமே ? “ அநத மாதி எனமனுா புலவர் ” (சிவஞானபோதம்.) அளிததலும் புரததலும் - சிருட்டிததலையும் காததலையும.

824. எம்மொடு மொருவ னாகியோர் கிரியை
இயற்றுவான போலவு மியற்றும்
பொம்மல தடைநத வுயிர்தொறு மலரிற்
பொருந்திய விரையெனப் பொருநதும
செம்மைகொ ளவனே மறைமுதற் கலைகள்
தெரிநதெமக் குணாததலா றெளிநதேம்
மம்மாகொண் மனத்துப பேதையா யினையோ
அவனையெம் போலநீ மதிததாய். ௪

825. எனவிதி புகல வவன்மக னவிலவான
இறையவ னருளிய மறைகள
அனைவரு மனைததும் பிரமமென றியமபிற
றையவீ தென்கொலென றறையத
தினகரச செழுங்கட் பகவனைப் புகழதல்
திணணமற றவையெலா முகமன்
கனைகடற புவியந தணரையா னெனவே
கழறுதல் போலநீ காண்டி. ரு

826. ஆதலா லவனே பதியெனுங் கடவுள
அருநதளை பொருநதிய வணுநாம
காதலா லவன தருளபெறு மடியா
கருதின்வா ராதொன் றிலலை

---

824. கிரியை - தொழில். பொம்மலது - வளபபததை. விரையென - மணத்தைபபோல மறைமுதல கலைகள தெரிநது உணர்தத லால் - வேதம் முதலிய சாததிரஙகளை இவருக்கு இது தகுமென்று ஆராய்ந்து தெளிவித்தலால மம்மா - மயக்கம்.

825. விதி - பிரமன. அவன மகன் - தக்கன். யாவரையும் எபபொருளையும் வேதங்கள் பிரமமென்று சொல்லும. இநத முரண் பாட்டுக்குக் காரணம யாது ? தினகரச செழுஙகண பகவனை - சூரியனைக் கண்ணாகவுடைய சிவபிரானை. திணணம - உணமை. முகமன - உபசார வழக்கு அந்தணரை யான எனவே கழறுதல்போல - பிராம ணாகளை யானெனறு (பிரமதேவனென்று) உபசாரமாகச சொல்வது போல.

826. பதி எனும் கடவுள் - மேலாந தலைவன எனபதற்குரிய தெய்வம். தளை - பாசம. அணு - உயிர். சூது அனைய முலையும்

சூதலா லனைய முலைகுழ லகட்டுத்
தோகையோா மருங்கினிற றுலநகும
கோதிலா வரனை யடைதிநீ யென்றான்
குளிர்மலாப் பொகுட்டில்வாழ் குரிசில் ௬

827. அல்லிமா மலர்மே லிருநதவன் மொழிநத
அமுதவா சகஞ்செவி புகுதச
செலனுறழ மிடற்றோ னிறையென வெவாக்கும்
தெளிநதுமா னததடத தடைநது
மல்லல்பெற் றிடுவான பரமனைக் கருதி
வருடமா யிரநதவம் புரிய
வில்லன புருவத் துமையொடும் விடைமேல்
மேவினு னிணையிலா விமலன. ௭

828. அன்னது தெரிநது தககனெம் மடிகள்
அடிகளை வணங்கிநின் றேதத
உன்னது கருதநி லருததியே தனைய
துரைததியென் றுரைததிட வுரைப்பான்
மன்னுமார் கலிசூ ழுலகுமவா னுலகும்
மலரய னுலகுமா லுலகும்
என்னதா ணையினின் றிடவுநிற் புகழ்வோர்
எவருமவந தெனைபபுகழந திடவும். ௮

---

அல் அனைய குழலும ஆல அனைய அகடும உடைய தோகை ; உமாதேவி யார் ; சூது - சூதாடுங் காய்கள் , அகடு - வயிறு மருஙகினில - வாம பாகத்தில். மலர்பபொகுட்டில - தாமரைககொட்டையில. குரிசில் - பிரமன்.

827. அல்லி - அகவிதழ்களையுடைய அமுதவாசகம் - அமு தம் போனற இனிய வாாத்தைகள. செல உறழ் மிடற்றோன் - மேகத்தை ஒதத நீலகணடபபெருமான. எவர்க்கும் இறை என. மானதத தடதது - மானஸ ஸரஸை மலலல - வளம. விமலன் - சிவபிரான.

828. எம அடிகள் அடிகளை - எம்முடைய சுவாமியான சிவ பெருமானுடைய திருவடிகளை. அருததி எது - விருபபம யாது ? ஆர் கலி - கடல். மலரயன் உலகும - பிரமலோகமும் நிற்புகழ்வோர் எவ ரும் - உன்னைத துதிபபவாகள யாவரும்.

829. எநதைநின் னிடததி லிருநதிடு முமையாள்
எனதுமா மகளென வரவும்
அநதணன் வடிவா யணைந்துநீ மணஞ்செய்
தருளவும வேண்டுமென் றறையக
கநதரங் கடுதத கநதரக கடவுள்
கருணையா லிவையளித் தொளிததான்
உநதுசீர் படைத்த சிறுவிதி மனததில்
ஓதிம வூர்தியை நினைததான். கூ

830. அன்னவா கனதமேதா னன்னவா றறிநதாங
கடைநதுநின ருசிக ளறையப்
பொனனுலாம் புரிசைப் புரியெனக் கிவணீ
புரியெனத தக்கமா புரியென்
றின்னறீர பதியொன் றியற்றவங் கதிறபோய்
எழிலரித் தவிசினமே லிருநது
தன்னைவா னவர்கோன முதலினோ பரவத
தனியர சாற்றினை றககன. கo

831. மற்றவன் மனைவி யாயினள வேத
வல்லியாம பெயருடை மடநதை
கற்றைவா ரளகத் தவடனை மலரோன்
காதலன் காதலாற கலநது

---

829. உமாதேவியார் என மகளாக வரவேணடும. கநதரம் கடுத்த - மேகததை ஒததத. கநதரக் கடவுள - கரிய கழுததை உடைய சிவபிரான். சிறுவிதி - தக்ஷபபிரசாபதி. ஓதிம ஊர்தியை - அன்ன வாகனனாகிய பிரமனை.

830. ஆசிகள - ஆசீர்வாதங்களை. புரிசைபபுரி - மதிலையுடைய நகரம ஒனறை. பதி ஒன்று இயறற - ஒரு நகரததைப பிரமதேவன் சிருட்டிகக. அரித தவிசினமேல - சிஙகாதனததினமேல. வானவர் கோன - இநதிரன.

831. தக்கன வேதவலலியை மணநது ஆயிரம் குமாரர்களைப் பெற்றான. கற்றை வார அளகததவள தனை - கற்றையாகிய நீண்ட கூநதலையுடையவளை. மலரோன காதலன - பிரமபுததிரனாகிய தக்கன். முன் தவந்தனில் - முனசெய்த தவத்தால. பயநது - பெற்று. முப்

முற்றவந் தனிலா யிரஞ்சிரூப் பயந்து
முபபுரி நூலவிதி முடித்துக்
குற்றமின் மறையு மனையவாக குதவி
இனையன வாசகங் கூறும். கக

832. நீவிர்க ளெவரு முயிரதொகை படைப்பான்
நிமலனை நினைந்துமா னத்தின்
மேவிநோற றுளத்தின விழைந்தது பொருந்தி
மீளதிரா லிவணென விடுபப
பூவில்வண் டினங்க ளிரைக்குமத தடத்துப்
பொருந்தியாண டருந்தவம் புரிந்தார்
ஓவிலசீர படைத்த நாரத னவணசேர்ந்
தயாதவ நோககியீ துரைப்பான். கஉ

833. மெய்த்தவம் புரிவீ ரேதுகா ரணநீர்
வெஃகிய வியல்பென வினவ
உத்தம முனிகேள படைபபது பொருட்டால்
உழந்தன மீதென வுரைப்ப
முத்தியைக கருதா தவதொழில் புரிவான்
முன்னினீர் பவமிதென றவாதம்
புத்தியைத திருபபி யுண்மைவீ டளித்தான்
பொருவிற ரதனெனும் புகழோன. கங

---

புரிநூல் விதி - உபநயனம. மறையும - வேத வித்தையையும. வாசகம் - வார்த்தையை.

832. படைபபான - சிருட்டி செயவதறகாக. நிமலனை - சிவபிரானை. மானத்தின மேவி - மானஸ வாவியை அடைந்து. நோற்று - தவம்புரிந்து. மீளதிரால் - திருமபி வருவீரகளாக. இரைக்கும - முரலும்.

833. வெஃகிய இயலபு - விருமபிய இயல்புக்கு. உழந்தனம் - முயன்றோம. அவதொழில் புரிவான - வீணான காரியத்தைச் செய்யும்பொருட்டு. முன்னினீர - கருதினீரகள. பவம இது - இது நீங்கள் செய்த பாவம். உணமை வீடு - உண்மையான முத்தியை.

834. சேயினோர் கதியிற புகுநதவா றுளத்தாற்
சிறுவிதி யறிந்துநோய் செறிநதாங
காயிரங் குமராப் பயநதவர் தமககும்
அவாக்குமுன் னவர்க்குரைத ததுபோல்
நேயமோ டியமப வவருமா னதம்போய்
நிகரிலா வருநதவம் புரிந்து
தூயநா ரதனை முன்புவீ டடைநத
துணைவாபோ லினபவீ டடைநதாா. கச

835. ாதையு மறிந்து வெகுணடுநா ரதனை
எஙகணுஞ சுழலகவென் றிசைதது
மேதகு புகழசோ தக்கனே ரிருபான்
மேலுமூன் றாகிய வேறகண்
மாதரை யுதவித தருமனே முதலாம்
மாதவாக களிததிரு பானேழ்
கோதையா தமையின் றவரைமா மதிககுக்
கொடுததிது சசியொடுங் கூறும். கரு

836. எல்லவ ரிடதது மருத்தியோா படிததாய்
இருததியென் றிசைததனன் விடுப்ப
வலலைவாண் மதியக கடவுளவா னணுகி
வளரொளி யிரலையே முதலாயச

---

834. சேயினோா - நூறு குமாரரகளும. கதியில - முத்தியில், சிறுவிதி - தக்கன நோய் - வருததம. பின்னும ஆயிரம பிள்ளைகளைப பெற்று முனனே தன புததிராகளுக்குச் சொன்னதுபோலத தவம புரியச் சொனனான். மானதம் போய் - மானத வாவியை அடைநது. துணைவாபோல - சகோதராகளைபபோல

835. சுழலக எனறு இசைத்து - திரிவாயாக என்று சாபம் இட்டு. இருபதது மூனறு பெணகளைபபெறறுச சாபம இட்டு இருபத்து மூன்று பெணகளைப பெறறுத தருமன முதலிய முனிவாகளுக்கு மணம செய்து அளிததுப பிறகு இருபததேழு பெணகளைப பெற்றுச் சந்திரனுக்கு மணம்செய்து வழங்கி அவனோடு சொலலலானான். மதி, சசி - சநதிரன.

சொல்லிய விருபா னெழுவரா மடவார்
துணைமுலைக் கிரிகண்மேற் றோய்ந்து
மல்லலங் கலவி யாரமு தருந்தி
வாழுநா ளூழ்வினை வலியால. கசு

837. ஆரன்மா தினையு மவடனக் கிளைய
அணிகொணமா தினையுமே யவாவிற
சேருதல புரிந்து துறந்தன ளொழிந்த
தேவிமார் தமையவர் சினமபூத்
தேருலாம புகழ்தோய் தந்தைமாட் டணுகி
இநதவா றியம்பலு மனையான்
நேரிலாச் சசிதன் கலையெலாங் கலைய
நிகழ்ததினன் கொடியசூ ணிலையே. கஎ

838. ஐந்துட னொருபான் கலைகளோர் பகற்கொன்
றாகியே யழியவோர் கலையோ
டிந்திரன புடைபோய் நிகழ்ந்தன விளம்பி
எனசெய்கே னிதற்கென விசைபபச

---

836. இருபத்தேழு பெண்களிடத்தும ஒரேவிதமான அன்புடன் இருக்கவேண்டும ஓர்படித்தாய் - ஒரே அளவாக. மதியக் கடவுள - சந்திரன. இரலை - அசுவினி இருபான் எழுவராம மடவார் - இருபத்தேழு நக்ஷத்திரங்களாகிய பெண்களை மல்லல - பெருமை கலவியாகிய அரிய அமுதத்தை.

837. ஆரல மாதினையும - கார்த்திகையையும அவள தனக்கு இளையவள், ரோகிணி. அவாவின - ஆசையோடு. ஒழிந்த - எஞ்சிய. தேவிமார்தமைத் துறந்தனன சினம் பூத்து - அந்த இருபத்தைந்து பெண்களும கோபம்கொண்டு தந்தை மாட்டு தக்கன்பால். நேரிலாச் சசி - ஒப்பிலலாத சந்திரன். கலையெலாம் கலைய - கலைகளெல்லாம் போகும்படி. சூளநிலை - சாபத்தை.

838. தினத்துக்கு ஒன்றாகப் பதினைந்து கலைகள் அழிந்துபோக, ஒற்றைக் கலையோடு இந்திரனிடத்திற் சென்றான். பிரமாவிடம சொன்னால் அவன் தன் மகனிடம வேண்டிச் சாபத்தை விடுவிப்பான்

சுந்தரக் கமலத் தயனொடு துரைக்கிற்
சொற்றரு தனயனை யிரந்துன
வெந்துயர்ப் பெருஞ்சூ ளகற்றுமென் றவன்பால்
விடுத்தனன் குலிசவேல் விடலை. க௮

839. சீதள கிரணத் தவிர்மதிக் கடவுள்
திசைமுகத் தொருவனைச் சேர்ந்தாங்
கோதின னிகழ்ந்த வுனதுகான் முளைக்கீ
துணர்த்திநோ யொழித்தியென் றுரைப்பப்
போதமில் கொடிய னனதுரை மதியான்
புகலில்வெகு சீற்றமே புரியும்
மாதுபா கனைநீ யடைதியென் றறைய
மருவினன் கயிலைமால் வரையில். க௯

840. நந்தியெம் பெருமா னருளினால் விடுப்ப
நாதனை வணங்கினின் றயன்சேய்
தந்தசூ ளதனான் மெலிந்தன னிதனைத்
தவிர்த்தியென் றுரைத்தலுஞ் சடைமேல்
இந்துவி னழியாக் கலைத்தனைத் தரித்தே
இதனைநா மணிந்ததா லிதுதான்
நிந்தனை பொருந்த வழிந்திடா திதனின்
நீடுநின் கலையெலாங் கூடும். ௨௦

---

என்று அவன் கூறினான். தனயனை - மகனாகிய தக்கனை. சூள் - சாபத்தை. குலிசவேல் விடலை - வச்சிராயுதத்தையுடைய இந்திரன்.

839. சீதளகிரணத்து - குளிர்ந்த கதிர்களையுடைய. அவிர் - விளங்குகின்ற. திசைமுகத்து ஒருவனை - பிரமதேவனை. நிகழ்ந்த ஓதினன். கான்முளைக்கு - புதல்வனாகிய தக்கனுக்கு நோய் ஒழித்தி - துன்பத்தை நீக்குவாயாக. போதம் இல் கொடியன் - அறிவில்லாத கொடியவன். சீற்றமே புரியும் - கோபிப்பான். மாதுபாகனை - சிவபிரானை. அறைய - பிரமன் கூற.

840. விடுப்ப - உள்ளே விட. நாதனை - சிவபிரானை. அயன் சேய் - தக்கன். சூள் அதனால் - சாபத்தால். மெலிந்தனன் - வாட்டத்தை அடைந்தேன். இந்துவின் அழியாக் கலைத்தனைத் தரித்தே - சந்திரனது அழியாத ஒற்றைக் கலையை அணிந்து. இதனின் - இந்த

841. ஐந்துட னொருபான் பகலெலாம் வளரும்
அன்னநாட் பின்னரே சுருங்கும்
இந்தவா றெழுகு மெனவிடை கொடுப்ப
எழின்மதி நிறைந்துவா னெழலும்
சந்தணி நெடுநீதோட் டக்கனீ துணாந்து
தனதுரை தடுத்தலாற பரனைப்
புந்தியின முனிந்து புலகனு முனிசொல்
புந்தியாற சினமொரீஇ யிருந்தான். உக

(கலிவிருத்தம்)

842. நின்றிட வினையது நிமலன திடைசோ
குன்றென வளரிரு குவிமுலை யுமையாள
வென்றிய துறுசிறு விதிமக ளெனவே
வன்றவ நிலைமையில வருசெயன் மொழிவாம். உஉ

843. விண்டொடு கயிலையின் மிசையரி யணைமேல
அண்டாக ளழுவெழு மழலவிட மமுதா
உண்டவ னுறைபொழு துமையவள பணியா
மண்டிய வுனதுமெய் வகைபுக லெனவே. உங

---

ஒரு கலையால. கலையெலாம கூடும - மறறக் கலைகளெலலாம் வந்து சேரும.

841. பதினைநது நாட்கள கலைகள வளரும; அதன் பிறகு பதினைநது நாட்கள தேயும். சநது - சநதனம தனது உரை தடுததலால் - தனனுடைய சாபததை மாற்றியதால. பரனை முனிநது - சிவபிரானைக் கோபிதது புலகனென்னும ரிஷி கூறிய அறிவுரையால கோபம் நீங்கி இருந்தான்.

842. இனையது நினறிட - இது நிற்க. நிமலன - சிவபிரான். சிறுவிதி மகள் எனவே - தக்கனுடைய மகளாக தவநிலைமையில் - தக்கன செய்த தவததால்.

843. விண தொடு - ஆகாசததை அளாவிய. அரியணை - சிஙகாதனம. தேவாகள அமுமபடியாக எழுந்த தீயைபபோன்ற ஆலகால விடததைத திருவமுதாக உணட சிவபிரான எழுநதருளியிருநதபொழுது. மெய்வகை - உணமையை எனவே - எனறு உமாதேவியாா வேணட,

844. செயல்குண முருவிவை செறிகில மெவணும்
மயலற நிறைகுவ மருவரு வுருவென்
றியலொடு பலவடி விசைகுவ மெனவண்
கயலவிழி யுமையொடு கழறின னிமலன். உச

845. ஈதிறை புகறலு மிவணுரு விலையென்
றோதினை பலவடி வுளதெனு மியல்பின
ரேதென வவையெம தருள்வடி வெனவிங்
காதலி னெனதுயர் வடிவவை யெனலும். உரு

(பதின்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

846. உன்னை நம்மெதிர மனநதனில வியநதனை நயநதாய்
உனதி டததினு முனையலா தனைவாக ளுளளும்
மன்னி யாமிருந தியறறுவ மியறறுத றவிாநதால்
மதியெ லாமொரீஇ மருவுவர் சடமதாய் மாதோ
அன்ன வாறுநீ தெரிதியென் றவனியுண் டவன்முன்
னுை வானவ ரானவ ரேனையோ ரகததுட்
டுன்னி யாங்குணா வளிததிடு மியற்கையை விடுததான
தோன்றல பொன்றுதலின்றிவாழ்கினறநந தோன்றல்.

---

844. செயலும் குணமும உருவமும நாம் பொருநதிலோம. எவணும - எவ்விடததும. மருவு அரு உரு எனறு.

845. இறை புகறலும - சிவபிரான திருவாய மலாநதருள. இவண் - இங்கே. உருவம இலலையெனறு சொலலிவிட்டுப பல உருவங்களுண்டென்று சொல்லும முரணபாடு எங்ஙனம பொருநதும் என்று உமாதேவியார் கேட்க, அவை எமமுடைய அருளின வடிவம எனறு சிவபிரான கூற, அபபடியானால் அவ்வருளனறி வேறலலா என வடிவஙகளே அவை என்று உமாதேவியாா கூறினர்

846. இயறறுவம் - அவரவர் செயகையைச செயவிக்கின்றோம். அவவாறு நாம புக்கு இயறறுதலை நீங்கினால யாவரும அறிவறற சடங்களாகிவிடுவா ஒரீஇ - நீஙகி. அவனி உணடவன - திருமால. உணர்வு அளிததிடும இயற்கையை - அறிவை அளிக்கும திறததை. விடுததான - நீஙகி நினறா தோனறல பொனறுதல இனறி-ஜனன மரணம் இல்லாமல. தோனறல் - தலைவா.

847. எங்க ளுயகன கணப்பொழு தினையவா றிருப்ப
ஏனை யோர்க்கெலா மெண்ணிலா வுகமதா யெவரும்
தங்கள செய்கட ளுகிய முறைமெலாந தவறிச்
சடம தாகியே சாதலுங் கௌரியாந தலைவி
கஙகை வாாசடைக கருணையங கடலடி பணிநது
கடிய னேனபுரி பெருமபிழை கருததினிற் கருதேல்
எஙக ளுதவிங கருள்சுாந தேவரையு மெழுப்பென்
றறைநதி ரநதிட வெழுப்பின னுருததிர ரவரை.உள

848. ஒன்று மேவிய பதின்மரா முருத்திர ரெழுந்தே
உவரி வாரணஞ் சுலவுபூ வுலகிலவந துலவாப
பொன்ற யங்கிய கொனறையந தொடைநெடுஞ சடிலப்
புனித நாதனை யருசசனை யருச்சுனப புவிமாட்
டன்று செய்தலாற பரமபொரு ளெவரையு மெழுப்ப
அனநத னுதியோா மனநதெளிந தெழுநதன ரதற்பின்
சென்று வானிறக் கயிலையஞ சயிலமேன் மருவித
திரிபு ராரியை வணங்கினன றிவையுரை செய்வார்.

849. எண்ணி கநதநா ளறிவெலா மொருவியே சடமாய்
எஙக டஙகடன் மறநதள விறநததீ திசைந்தேம்
அணண லேயவை தீரவொன றருடியென் றறைய
அனைய தீமைக ளுமையவ டனதிடத தாகும்

---

847. இனையவாறு இருபப - ஜீவாகளிடததில் புகுநது அறிவு வழஙகாமல் அவற்றைச சடமாகச செய்து வீற்றிருக்க. கடியனேன் - கடுமையையுடைய நான. உருத்திரரை எழுபபினன.

848. பதின்ேருருததிரர்கள். உவரி வாரணம சுலவு-உபபுக்கடல் சூழ்நத. உலவா - உலவி. பொன் தயங்கிய - பொனனைபபோன்ற நிறததை உடைய. சடிலம - சடை நாதனை - சிவபெருமானை. அருசசுனப புவிமாட்டு - திருவிடைமருதூரெனனும தலததில , அருசசுனம் - மருது. அனநதன் - திருமால். வால்நிறம் - வெண்ணிறம்.

849. ஒருவியே - நீங்கி. கடன் மறநது - செய்யவேணடிய காரியஙகளை மறநது. தீது இசைந்தேம் - பாவததைக் கொணடோம ஒன்று அருளதி - ஒரு பரிகாரத்தை உரைததருளவாயாக. அநதப பாவம உமையைச சாரும. நும பதததை - உங்கள் உலகததுக்கு. நககன - சிவ

நண்ணு நமபதத தெனவிடை கொடுததன னதற்பின்
நகக னுரியைத தககன்மா மகளென நணுகி
மணணில வாழுகி வநதியா மணததுமென் றிசைப்ப
வணஙகி னுளவிடை கொணடனள கருணைசோவல்லி.

850. அணியு மிநதுவி னிளநிலா வெறிப்பது கடுப்ப
அறல்ப ரநதசெஞ சடைமுடிக் கடவுளை யகனறு
மணியு மாரமுங கரைகளிற் றிரைகளவந திறைப்ப
மருவு காளிநதி வனசமேல வலமபுரி வடிவாய்ப்
பணிகு வார்பிறப் பறுததருள பரமபொரு ளுமம்
பனனி யனனவன பனனியங கிருநதனள பன்னாள்
தணிவி லாபபுகழ மாசிமா மகபபுன லாடத
தகக னென்பவன மறைக்கொடி யொடுமேவண்சாரநதான.

851. அண்டா சூழ்தர மேவிய தக்கனந நதிநீா
ஆடி மீளபொழு தாஙகொரு பாங்கரி னலாமேல
எண்ட விாநதிடு முயிாகளெலா முயிரென விருபபோன்
இடம்பு ரிநதவள வலம்புரி யாகிவீற் றிருததல்
கணடெ டுததுழிக குழவியா யினளவன் வியநதே
கவுரி யெம்மக ளாகிவந் தனளெனக் களித்து
மண்டு சீருள மறைக்கொடி தனிாககரத தளிதது
மன்னு தனனக ரன்னவ னடைநதனன் மன்னோ.

---

பிரான். நாரியை - உமாதேவியாரை மணததும - திருமணம புரிநது கொளகினறேம கருணைசோ வலலி - உமாதேவியாா.

850. இநதுவின - சநதிரனது கடுபப - ஒபப. அறல் பரநத - நீர் பரவிய. கங்கை வெண்ணிறமுடையதாதலின அதன் நீருக்கு நிலவு உவமையாயிற்று. ஆரமும - முத்துக்களையும. காளிநதி வனசமேல - யமுனை நதியில உணடான தாமரை மலரினமேல். வலமபுரி வடிவாய் - வலமபுரிச் சங்க உருவத்தை உடையவளாகி. பரமபொருள நாமம பனனி- சிவபிரானுடைய திருநாமததை ஜபிததுக்கொணடு. அனனவன் பனனி - அவன தேவியாகிய உமாதேவியாா. மறைக்கொடியொடும - தன மனைவி யாகிய வேதவலலியோடும.

851. அணடா - தேவர். பாஙகரின - பககததில இடம புரிந தவள் - வாமபாகததை விருமபிததங்கிய உமாதேவியாா. (பி - ம்.) இடம் பிரிநதவள. எடுததுழி - அநத வலமபுரிச சஙகை எடுததபோது. குழவி ஆயினள - பெண குழநதையானள். மறைககொடி - வேதவலலி.

852. காதன் மீக்கொளக் கௌரியைமறைக்கொடிவளர்த்தாள்
கருணை வாண்முக வையையை யாண்டவண் கடப்பச்
சீத வாண்மதி யணிந்தருள் பரம்பொருள வதுவை
செய்ய வேதவனு செய்வலென் றுமையுரை செய்யப்
போத நீடிய தநதைதா யுளநதனின் மகிழ்ந்து
பொருவி லாவொரு மாடமப் புரிக்கயல புரிவித
தாத ரம்பெறு கன்னிமா ரொடுமதில விடப்போய்
ஆண்டு சென்றிருந்தருநதவம் புரிநதன ளமலை. ௬௨

853. பததின் மேலுமங் கோரிரண் டாகிய பருவம
பருவ ரற்பிறப் பறுததருள பராபரை படைப்பத
தத்து வாதிரைக் கடறகடு வடக்கிய மிடற்றோன்
தக்கன் மாபுரத் துமையவ ளிருநதிடுந தலதது
மெதது சீரொரு மறையவன போலவந தணுக
மிகவு மெமபிராற கன்பரிங் கிவரென விருபபு
வைத்த சிநதைய ளாகியாங் கெழுநதெதிர நடநது
வணஙகி யேததுபு நின்றன ளறமெலாம் வளர்பபாள.

854. எம்பிராட்டியையெம்பிரான்றெரிந்தொருபொருள்வேட்
டீண்டு வநதனந தருதியே லுரைப்பமென் றிசைப்ப
நம்ப கேட்டியெற கிசையுமேற் றருகுவ னதனை
நவிறி நீயென வுனைமணம் புரிந்திடு நயப்பால்

852. ஐயை - ஆரியை; உமாதேவியார். ஐயாண்டு அவண் கடபப - ஐநது பிராயம ஆக பரம்பொருள - சிவபிரான. வதுவைசெய்ய - என்னை மணமபுரிநது கொளளுமபடி. செய்வல் - செய்வேன். போதம் - அறிவு. பொரு இலா - ஒபபில்லாத அப புரிக்கு அயல் - அநத நகரத் துககு அருகில் ஆதரம் - அன்பு. அமலை - உமாதேவியார்.

853. உமாதேவியார் பன்னிரணடு பிராயத்தை அடைய. பருவம் - பிராயம. பருவரல - துன்பம. பராபரை - சத்தி. தத்து - துளளு கின்ற. கடு - விடததை. தககன் மாபுரம் - தக்கனுடைய நகரம ஏத்துபு - துதிதது. அறமெலாம வளாபபாள - முபபததிரண்டு அறஙகளையும வளாக்கும உமாதேவியார்.

854. வேட்டு - விரும்பி நம்ப - பெரியோய் எற்கு இசையு மேல் - கொடுபபதற்கு என்னுல் முடியுமானல. நவில்தி - கூறுவாயாக.

இம்பா மேவின மதற்கிவண் மறுததினி யுரையேல்
என்று கூறலு மிடர்நெடுங் கடலிலவீழ்ந தெழிரேய்
கும்ப மாமுலை செவிததுணை காத்திற லடைத்துக்
குமுத வாய்திறந தமுதவா சகமிவை கூறும். ௩௫௪

(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்)

855. பெய்தேனிதழிதொடையும் பிறையுமபுனைவோன்வதுவை
செய்தே யருளத தவமே செய்வே னுடனீ திசைத்தாய்
பொய்தோய் மனததோய் கடிதே போபோ வெனனப புகனறு
வைதே யொருபா லகனருண மறுவில கறபின் மடவாள.

856. இவ்வா றமலை யகல வெவருந தெரியா வண்ணம
மைவாழ் களநங் கடவுள வளர்தன னுருவ மருவச
செவ்வாய்க் கருங்க ணுமையா டெரியா விழிநீரசொரியா
ஒவவா வனபிற் றெழலு முயாகன் னியரீ துரைப்பார்.

857. மனனுங் காதன மறையோன மாயம் வலலன் கொல்லோ
என்னே யிதுதான் கன்னி யெம்மை நோக்கி லாளென்
றன்ன நடையார் தம்மி லங்கண் சிலவ ரோடித்
துன்னும் புகழ்சே தக்கன முன்ன ரிதனைச் சொன்னர்.

858. அந்த வேலை யவனு மறிவா லரனென றறிநதே
சிநதை மகிழ்நது பரன்முன் சென்றே போறறி நின்றே

---

நயபபால் - விருபபத்தால். இமபா - இங்கே. இடர் - துன்பம். அமுதவாச கம - அமுததைதைப போனற வார்ததைகள.

855. இதழிதொடையும் - கொனறை மாலையையும. வதுவை - திருமணம. ஈது இசைததாய். கடிதே - விரைவாக. ஒருபால அகன்றாள - வேறொரு பக்கததே சென்றாள்.

856. அமலை - உமாதேவியார மை வாழ களம நம் கடவுள—நீல கணடப பெருமான. தன உருவம மருவ - தமக்கு இயலபான திருவுரு வததை எடுதது நிற்க ஒவவா - ஒபபு வேறு இலலாத.

857. கனனி - உமாதேவி.

858. அவனும - தககனும. கொநது - கொததுு. குழலாள - தாக்ஷாயணி.

எந்தை யெனது நகரி னெய்த வேண்டு மென்றே
கொந்தார் குழலா ளொடுதன் கொடிமா ளிகைபுக் கொண்டான்.

859. ஆதி முதல்வ னங்கோ ரரியா தனமீ தமர
மாது தன்னை வேத வல்லி புலவி மகிழ்ந்தே
சோதி நன்னீ ராட்டித் துலங்கு கலன்கள் சூட்டிக்
கோதி லுயிர்கட் குயிராங் குழகன் பாங்கர் விடுத்தாள்.

860. கருந்தா ழளகக் கௌரி கருணைக் கடலின் புடைவந்
திருந்தா ளிருந்த வமையத் திமையோ ரயன்மால்குறுகிப்
பொருந்தா தரவிற் பணிந்தே புரைதீ ரிதழி பிரசம்
சொரிந்தார்சடையானயலேசூழ்ந்தார்நெஞ்சமவாழ்ந்தார்.

(கலிநிலைத்துறை)

861. தக்க னப்பொழு தெழுந்தனன் மறைக்கொ டிதளிர்க்
கைக்க ணுற்றகர கப்புனல் விடக்க வினுலாம்
செக்கர் பெற்றகம லக்கழல் விளக்கி நுதல்சேர்
அக்க நக்கனை யருச்சனை புரிந்த னனரோ. சச

862. அருத்தி தன்னுட னருச்சனை புரிந்த பின்ரன்
கரத்தி லம்பிகை கரத்தினை யளித்தெ னதுகண்

---

859 அரியாதனம் - சிங்காசனம் புலவி - அணைத்துக்கொண்டு. சோதி - ஒளியையுடைய. கலன்கள் - ஆபரணங்களை குழகன் - சிவ பிரான்.

860. கரிய பின்தாழ்ந்த கூந்தலையுடைய. கருணைக்கடல் - சிவ பிரான். குறுகி - அடைந்து. பொருந்து ஆதரவின் - இசைந்த அன்பினுல். புரை - குற்றம். இதழி பிரசம் சொரிந்து ஆர் சடையான் - கொன்றையானது தேனைச் சொரிந்துகொண்டு அமைந்த சடையை யுடைய சிவபெருமான். வாழ்ந்தார் - மகிழ்ந்தனர்.

861. மறைக்கொடி - வேதவல்லி. கரகப் புனல் விட - கமண்டலத்தில் உள்ள நீரை வார்க்க. கவின் - அழகு. செக்கர் - செந்நிறம். நுதல் சேர் அக்கம் நக்கனை - நெற்றிக் கண்ணையுடைய சிவபிரானை; அக்கம் - கண்.

862 அருத்தி - அன்பு. எனது கண் - என்னிடத்தில் வரத்தின் - நான் பெற்ற வரத்தினுல். மறையின் சிரத்தில் - வேத முடியில். இறைவனுகிய நினக்கு மணம்செய்து கொடுத்தேனை

வரதத்தின் வந்துமக ளானவுமை யானை மறையின்
சிரதத்தி னிற்குமிறை நிற்குதவல் செய்த னனியான். ௬௨

863. என்று கூறியுத கத்தினை விடுப்ப விமையோர்
வென்றி யனபொடு புகழ்ந்தனர் மகிழ்ந்த னாவிரைக்
கொன்றை வேணியன்மறைந்தனனிறைந்த துயரகொண்
டன்று சங்கரி வருந்திய துரைபப தரிதால ௬௩

864. மனனு தக்கனிவை கண்டழ லெனசசி னமரீஇ
நன்ன லம்பெறு காத்துணை புடைதத னனகைத
தெனனை யெண்ணலன் மறைந்துவசை தந்த னனெனு
முனன வன்றனை மொழிந்தன னிகழ்ச்சி மொழியே. ௬௪

865. பண்டு போலவுமை மாடம தடைந்து பரிவால
மண்டு நறறவ மியற்றின ளியறற மகிழ்வாய்
விண்டு வன்னதன மங்கையெதிர வந்து விடைமேற்
கொண்டு போயின னெழிறகயிலை மீது குழகன். ௬௫

866. கன்னி மாரிது தெரிந்தயன் மகன்பு டைகலந
தினன செய்கையுரை செய்யவிறை வன்ற னையிகழ்ந
தன்ன நாண்முதல மதிததில னிருப்ப வதனைத்
துன்னு வானவ ரறிந்தறைகு வாரி னையசொல். ௬௬

---

863. உதகத்தினை விடுபப - தாரை வாரக்க. விரை - நறு மணம். வேணி - முடி. சஙகரி - தாக்ஷாயணி.

864. சினம மரீஇ - கோபம கொணடு. காததுணை புடைத் தனன் நகைத்து - இரணடு கைகளையும கொட்டிச் சிரித்து. எண்ண லன - மதியாஞகி வசை தந்தனன் - அவமதிபபை உணடாக்கினன். முன்னவனறனை - சிவபிரானை. இகழ்சசி மொழி மொழிந்தனன்.

865. மாடமது - கனனிமாடததை. பரிவால - அன்பினுல. விணடு அன்ன தனம - மலையைப்போனற நகில்களையுடைய. குழகன் - இளமையையுடைய சிவபிரான.

866. கனனிமார் - தாக்ஷாயணியின் தோழியாகளாகிய கனனிப பெணகள. அயனமகன புடை கலநது - தக்கனிடம சென்று. அனன நாள முதல - அனறுமுதல. மதித்திலன் இருபப - மதியாமல இருகக.

867. தக்க னக்கனை மதிக்கில னிறத்தல் சரதம்
மிக்க வன்னவ னிடும்பணியி னிற்கும் வினையால்
ஒக்க யாமுமழி வாகவரு மென்ற வனுறும்
பொக்கின் மாநக ரடைந்தவனொ டின்ன புகல்வார். சஎ

(வஞ்சிவிருத்தம்)

868. பெற்றநந்தனி லேறு பிரானையுமோ
உற்றுநந்துமை தன்னையு முன்னலீர்
குற்றநங்க டெரிந்து குறித்திடினற
சுற்றமபெறு வாரெவர் சொலலுதியால். சஅ

869. என்றேபல புந்தி யிசைத்திடலும்
நன்றேயென வுனனி நயந்ததனுக்
கின்றேது குயிற்றுவ தென்றிடலும்
நின்றேயிது தனனை நிகழ்த்தினரே. சகூ

870. விண்டோய்கயி லைகிரி மீதணுகித
தண்டேன்மொழி யாளொடு சங்கரனைக
கண்டேவரு கென்று கதித்தபுகழ்
கொண்டேசெறி யுமபாகள கூறினரால். ருo

871. இவ்வாறிமை யோாக ளிசைப்பவிசைந்
தவ்வானவ ரஙக ணமர்ந்திடவைத

867. நக்கனை - சிவபிரானை இறததல சரதம - தக்கன் அழிதல் திண்ணம. அநதத் தக்கன ஏவும ஏவலகளில ஈடுபட்டு நிற்கும பாவத தால் யாமும ஒருஙகே அழியுமபடியாக நேரும. பொக்கு இல் - குற்றம இல்லாத.

868 பெற்றம - இடபவாகனம். உற்று உநது உமை. உன் னலை - மதிககவிலலை 'குற்றம பாாககிற் சுற்றம இலலை' என்று தேவா கூறினர். குறிததிடின - உளஙகொணடால.

869. புநதி - அறிவுரை. இன்று குயிற்றுவது எது, குயிற்று வது - செய்வது.

870. மொழியாள - உமாதேவியாா. வருக என்று. கதிதத - மிகக.

தொவ்வாரச தக்கிரி யுற்றனனாற்
செவ்வாய்மறை வல்லி திருக்கொழுநன். ௫௧

**(எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்)**

872. சின்ம யத்தனு வந்தி ருந்த
திருந்து மன்ன சிலம்பின்மேற்
பொன்ம லிந்திடு மந்தி ரத்திடை
முன்பு வாசல் புகுந்திட
நன்மை தங்குற வங்கு றுங்கண
நாதர் நாதனை யெள்ளிய
புன்மை யாயெம தீச னுக்கெதிர்
போக லென்று தடுத்தனர். ௫௨

873. சீறு பூதர் தடுத்தல் கண்டு
சினம்பு ரிந்து திரும்பியே
வீறு தன்னகர் தன்னில் வந்திது
விண்ண வர்க்குரை செய்துபின்
ஏற தேறிய சங்க ரன்றனை
இந்த நாண்முதல் லாகநீர்
மாறு கொண்டு மதித்தி டாதிரும்
எனவி சைந்தனர் வானுளோர். ௫௩

874. என்சொல் கேணிதை யென்சொல கேளெம
தீசன் மேன்மை யறிந்துமப்
பொன்செ யஞ்சடை யானை யெள்ளிய
புலவர் பட்டது கண்டுநீள்

---

871. இசைந்து - இணங்கி. ஒவ்வா ரசதக்கிரி - பிற மலைகளை இணை ஒவ்வாத வெள்ளி மலையை. மறைவல்லி - வேதவல்லியின். கொழுநன் - தக்கன்.

872. சின்மயத்தன் - ஞானமே திருவுருவாக உடைய சிவபிரான். உவந்து இருந்த. சிலம்பு - மலை. மந்திரம் - திருக்கோயில். முன்பு வாசல் - தலைவாசல். கணநாதர் தடுத்தனர்.

873. சினம் புரிந்து - தக்கன் கோபங்கொண்டு. மாறுகொண்டு - விரோதித்து. மாறுகொண்டு இரும், மதித்திடாது இரும் என்க. இசைந்தனர் - இணங்கினார்கள்.

கொன்செ யுநதுயா மாய வாழ்வு
குறிதகி தறகு மிசைநதனா
மினசெய் வானவ ராத லால்வினை
வெல்ல வலலவ ரில்லையே. ௫௪

875. அன்ன போதிசை வான வானவர்
ஆரு மேக வறைநதரோ
இனன பானமை யிருககு நாளில
இருக்கு நானமுக ஞோமகந
தன்னை யஙக ணியற்ற வுன்னுபு
தனன தேவல்செய் தனயரை
மன்னு மானமுத லும்பரைக் கொடு
வம்மி னென்று விடுததனன. ௫௫

876. மூளு கினற சினஙகொ டன்மகன்
முனனி சைததது முன்னியான்
மாள வேவரு மேனு மன்னது
வருக வென்று மனநதுணிந
தாளு நாயகன் வெள்ளி வெறபில்
அடைநது நநதி விடுததிடக்
காள கண்டனை முன்ப ணிநதிரு
கைகு விததுரை செய்குவான். ௫௬

---

874. பொன் செய அம சடையானை - பொன்னைப போன்ற அழகிய சடையையுடையவனை எளிய புலவர் - அவமதிதத நீசாகள. பட்டது கணடும - அழிநது போனதைப பார்த்தும். மாய வாழ்வு குறித்து - தக்கனல் வரும் பெருமையையுடைய பொய் வாழ்க்கையை நினைநது. வானவா இசைநதனா.

875 மகம - யாகம. உன்னுபு - எணணி. தனயரை - புத்திரர் களை. தனயரை விடுததனன.

876. பிரமன செயல். தன் மகன என்றது தக்கனை. யான் மாளவே வருமேனும - நான இறக்குமபடி நேர்நதாலும் ஆளும் நாய கன் - சிவபிரானது வெள்ளி வெற்பில் - கைலாச மலையை. காள கண்டனை - நீலகணடப பெருமானை.

877. எந்தை கேளொரு வேள்வி யானதை
யானி யற்றுவ னங்கணீ
வந்தெ னக்கருள் செய்தி யென்ன
மகிழ்ந்து நம்முரு வானசீர்
நந்தி தன்னை விடுப்ப மேகென
நான்மு கன்றொழு தேகியே
மைந்த னுக்கு முரைத்து நீதி
மனோவ திப்புடை யுற்றனன். ௫௭

878. மிக்க வேள்வி யவன்றொ டங்கலும்
வீறு மான்முதல் விண்ணுளோர்
தக்க னோடு மடைந்து வேள்விசெய்
சாலை யின்புடை சார்தலும்
செக்கர் வேணியர் நூறு கோடியர்
சீறு சாரதர் சூழவே
அக்க ணந்தனி னந்தி வந்தனன்
ஆதி தேவன தேவலால். ௫௮

879. எந்தை வந்தது கண்டு வேதன்
எழுந்து கைப்பது மங்குவித்
துந்து மாதன மீதி ருந்த
உவந் திருந்தன னீதுகண்
டுந்த மற்ற பவங்கொ டக்கன்
அழைத்து ளாரெவ ரென்றுதன்
சிந்தை யூடு குறித்து ணர்ந்து
செயிர்த்து வேதனொ டோதுவான். ௫௯

---

877. வேள்வியானதை - யாகத்தை. விடுப்பம் - அனுப்புவோம். மைந்தனுக்கும் - தக்கனுக்கும். மனோவதி - பிரமன் வாழும் நகரம்.

878. மால் முதல் - திருமால் முதலாகிய. செக்கர் வேணியர் சிவந்த தலைமயிரையுடையவராகிய. சாரதர் - பூதர். ஆதிதேவனது ஏவலால் - சிவபிரானது கட்டளையினாலே

879. எந்தை - நந்திதேவர். வேதன் - பிரமன். ஆதனம் மீது இருந்த. பவம் கொள - பாவங்களைக் கொண்ட. அழைத்துளார் எவர் நந்திதேவரை அழைத்தவர் யார். செயிர்த்து - கோபித்து.

880. சோதி முன்ன ரடைந்து வேள்வி
தொடங்கு கின்றது சொற்றனை
ஆதி யுந்திய நந்தி யைத்தொழு
தன்பி னென்மு னிருத்தினை
வேத கேண்மதி தாதை யாதலின்
வெட்டி டாதுனை விட்டனன்
நீதி யோவிது செய்த தென்று
புகன்று பின்னு நிகழ்த்துவான். ௬௦

881. எள்ளு நீர்மைகொள பித்த னாகி
இருக்கு மீசன மகத்தவி
கொள்ளு தற்குரி யன்கொ லீது
குறித்தி டாது கொடுத்தனா
தள்ளு மற்றதை விண்டு வேயுயர்
தாணு வென்ன மதித்துநற
கள்ளு றுங்கம லத்த முன்பவி
காத றன்னொடு மீதிநீ. ௬௧

882. மற்றெ வாகரு மளித்தி யென்னலும்
மன்னு நந்தி மனனுசினந
துற்ற தக்கன முகநதெ ரிந்துணா
வோடு நீதியில பேதைநீ

---

880. சோதி முன்னா அடைந்து - சிவனிடம் போய். ஆதி - சிவபிரான். உந்திய - விடுத்த. என் முன இருத்தினை - எனக்கு முன்னாலே வீற்றிருக்கச் செய்தாய். கேளமதி - கேட்பாயாக. தாதை ஆதலின் - நீ என தகப்பனாக இருத்தலினாலே.

881. எள்ளும் நீர்மைகொள - இகழ்வதற்குரிய இயல்பையுடைய. மகத்து அவி கொள்ளுதற்கு உரியன்கொல - யாகத்தில் அவிர்ப்பாகத்தைக் கொள்ளுவதற்கு உரியவனோ? இந்த விஷயத்தைத் தெரிந்து கொள்ளாமல் அவனுக்கு அவிர்ப்பாகம் கொடுத்தாகள். இனித் திருமாலையே முதற்கடவுளாகக் கொண்டு கொடுக்கவேண்டுமென்று தக்கன் உரைத்தான். தள்ளு: ஏவல. விண்டுவே - திருமாலே. உயா தாணு - உயாந்த கடவுள. அவி - அவிர்ப்பாகத்தை. ஈதி - கொடுப்பாயாக.

பெற்ற மேலம லற்ப ழித்துரை
பேசி னுயவ னன்றியே
கொற்ற வேளவி குயிற்று வோாமுடி
போக வென்றுரை கூறியே. ௮௨

883. சீறி யெம்பெரு மானை யெள்ளிய
தீய நின்றலை போகவென்
றீறி லாத பரம்ப ரன்றனை
எள்ளு நினறெ டிருநதிடும்
வீறு மான்முத லுமபா யாவரும்
வீர மேவிய சூரனால
மாற ருநதுய ரதது ழுழ்கி
வருநத வென்று சபிததனன. ௮௩

884. இநத வாறு புகன்று நநதி
எழுநது சாரதா சூழவே
அநதண் மாமதி வேணி யானை
அடைநத னைதது மறைநதுபின்
மைநது றுங்குண வாசன மேவினன்
மன்னு வேதன மகங்குலைந
துநதி டுநதுயா கொண்டு தததம்
இடததி யாவரு முறறனா. ௮௪

---

882. திருமாலுககு முதலில அளிததுவிட்டுப பிறகு மற்ற யாவருக்கும அளிபபாயாக. நநதி - நநதிதேவா உணாவு - அறிவு. நீதி - தருமம. பெற்றமமேல அமலன பழிதது - இடபவாகனததின்மேல எழுநதருளும சிவபிரானை இகழநது. கொற்றவேளவி - வெற்றியைத் தரும யாகததை. குயிற்றுவோா - செய்வோா. முடி போக - தலை அறுவனவாக. உரை - சாபம.

883. எள்ளிய - இகழ்நத. மாலமுதல - திருமால் முதலிய. மாறு அரும - பரிகாரம இலலாத. போகவென்றும வருநதவென்றும.

884. சாரதா - பூதபபடையினா் மதிவேணியானை - சிவபிரானை. மைநது உறும - வலிமை பொருநதிய. குணவாசல் - கீழ்க் கோபுர வாசல். வேதன் - பிரமன். மகம குலைநது - யாகம் அழிய.

885. சொற்ற ரும்புகழ் நந்தி முன்பு
சுளிந்து கூறிய சூளினுல
அற்றை நாண்முதல யாரும வேளவி
இயற்ற வஞ்சி யமாநதனா
மற்றை யோாபக றக்க னென்பவன்
மாம கஞ்செய வுன்னியே
கொற்ற நறறொழில கறற வும்பாகள்
கமமி யறகிது கூறுவான. ௮௫

886. மகமபு ரிநதிடு சாலை யொன்று
வகுதது யென்ன லு மனனவன
திகழ்நத கஙகை மருஙக டைநது
திருநது மாயிர யோசனை
அகனற சாலைய தொன்றி யறறலும
அஙக ணேகி யயன்சுதன
சகம்பு கழநதிடு காமா கண்டு
தளுது ளஙகளி கொண்டனன். ௮௬

887. பின்ன ரொறறா புகநதெ ரிநது
பிறைக்கொ ழுநது மிலைசசிய
மினனி ருஞசடை யணண லலலது
வேறு தேவாகள யாரையும
மனனு மிவவிடை யுயதத ரென்னலும்
வலலை யேகி யவர்கடகலாம
சொன்ன போதரி யாதி வானவர்
யாரும் வநதனா துன்னியே. ௮௭

885. சுளிநது - கோபித்து. சூளினுல - சாபத்தால். மற்றை ஓர் பகல் - வேறு ஒருநாள. மகம செய - யாகம செய்ய. உமபாகள கம்மியற்கு - விசுவகாமாவுககு.

886 வகுதது - அமைபபாயாக. அனனவன் - அந்த விசுவ கர்மா. அயன் சுதன - தக்கன. காமர் கணடு - யாகசாலையின் அழ கைப பாாதது

887. மிலைசசிய - அணிநத. அண்ணல அலலது - சிவபிரானைத தவிர உய்த்திர் - அழைதது வருவீர்களாக. அரி ஆதி வானவா - திருமால் முதலிய தேவாகள.

888. வந்து தக்கன தியாக சாலையின்
மாய னுங்கம லத்தனும்
இந்தி ரன்முத லான தேவர்கள்
யாரு மங்க ணிருந்தபோ
துந்தி டும்புகழ் மாத வத்தர்
உவந்து சூழ்தர வந்தனன்
தந்தி ரம்புரி மாலை வென்றடல்
மாலை கொண்ட ததீசியே. அஅ

889. நன்றி கொன்றிடு தக்கன மாமுனி
நண்ணு கின்றது கண்டரோ
இன்றெ னக்கிவ னஞ்சி வந்தனன்
என்று சிந்தையி லெண்ணியே
வென்றி மாதவ வருக வென்றொரு
வீறு மாதன மீதலும்
துன்று மாதவ ரோடி ருந்திது
சொல்லு வான்வினை வெல்லுவான். அகூ

890. எம்மை யிங்ங னழைத்த காரணம்
என்ன வென்னலு மீசனெம்
அம்மை தன்னை மணந்த தறபின்
நிகழ்ந்த யாவு மறைந்தரோ
மைம்ம லிந்திடு கண்ட னுக்கவி
மாற்று வான்மக மாற்றுவேன்
உம்மை யிங்கு விளித்த தன்மையும்
இன்றி தற்கென வோதினன். எ0

888. கமலத்தனும் - பிரமதேவனும். மாதவத்தர் - முனிவர்கள். தந்திரம் புரி மாலை வென்று - குபன எனனும அரசனுக்குத் துணையாக வந்து பல தந்திரங்களைச் செய்து போர்செய்த திருமாலை வென்று. அடல மாலை - வெற்றிமாலை.

889. மாமுனி - ததீசி முனிவர். எண்ணியே - தக்கன நினைத்து. சொல்லுவான் - ததீசி முனிவர் சொல்லலாயினர்.

890. மை மலிந்திடு கண்டனுக்கு - நீலகண்டமுடைய சிவபிரானுக்கு. அவி மாற்று வான மகம ஆற்றுவேன் - அவிர்ப்பாகத்தைக் கொடாமல் மறுக்கும் பெரிய யாகத்தைச் செய்வேன்.

891. ஊற கன்ற ததீசி தக்கன்
உரைதத பான்மை வினவியே
வீறு கொண்ட பராப ரன்றனி
மேன்மை தன்னை விளம்பியே
ஏறு தங்கு பதாகை யண்ணல்
எவர்க்கு மீச னவற்குநீ
மாறு கொண்டு மகஞ்செ யேலென
மாசி லானிது பேசினன். எக

892. மாசு றென்பு புனைந்து சேகர
மாலை யானது பூணுமோ
தேசு நீறது பூசு மோதசை
தீர்ந்த தீயுட லேந்துமோ
கேச மூங்கரு மாம ருப்பொடு
கேடு றாமையி னோடுமே
நேச மோடு தரிக்கு மோபரம்
ஆகி நின்றிடு நின்மலன். எஉ

893. கோல ஞாலமொ டுயிர்கள செற்றல
குயிற்று மோபுலி தந்தியின்
தோலொ டங்கி கணிசசி தாவுழை
சூல மின்ன சுமக்குமோ

---

891. ஊறு - துன்பம். தனி மேன்மை - ஒருவருக்கும் இல்லாத சிறப்பான பெருமைகளை, பரத்துவத்தை. ஏறு தங்கு பதாகை அண்ணல் - இடபக்கொடியையுடைய சிவபிரான். ஈசன - கடவுள். மாறு கொண்டு - விரோதம் கொண்டு. மகம் செயேல - யாகத்தைச் செய்யாதே.

892. தக்கன கூற்று. மாசுறு என்பு சேகர மாலை - தலை மாலையை. தசை தீர்ந்த தீ உடல் - ஊன நீங்கிய தீய உடலாகிய முழு என்பை, இதற்குக் கங்காளமென்று பெயர். கேசமும் - மயிரையும். கருமா மருப்பு - பன்றிக்கொம்பு. கேடுறு ஆமையின ஓடு. பரமாகி - எல்லோருக்கும் மேலாகி.

893. செற்றல் குயிற்றுமோ - அழித்தலைச் செய்வானோ. புலி தந்தியின தோலொடு - புலித்தோலையும் யானைத்தோலையும். கணிச்சி -

சால வுமபலி கொள்ளு மோநடம்
ஆடு மோமிகு சாரதா
சில மேவிய படையெ னுமபடி
திரியு மோவுயா தேவனே. எந

894. நஞுசெ யிற்றட ைகம வெண்டலை
நவையெ ைது தரிககுமோ
விஞசு கின்றதன் மேனி யல்லது
வேறு மோாதனு மேவுமோ
எஞசு ருத விருநதி றலபெறும
ஏறு தனமிசை யேறுமோ
அஞசு மால மருநது மோநிகா
அன்றி நினறிடு மண்ணலே. எச

895. ஈம மாட லொருத்தி யைததலை
எய்த வைதத லொருத்தியை
வாம மீதினில் வைததல பிளளை
மகிழ்ந்து பெற்றிடல் வெங்குணம்
காம ரண்ணல் படைகரு மோவென
ஏது வாகிய காதைகள
தாம மாபுள தக்க னோடு
ததீசி மாமுனி பேசுவான். எரு

---

மழுவினையும. தாவு உழை - தாவுகினற மானையும். பலி - பிக்ஷை. சாரதா - பூதா. உயர் தேவன - எலலோருக்கும் மேலாகிய தேவன்.

894. விடததையுடைய பல்லையும வலியையும பெற்ற பாம்பு களை. வெண்டலை - தசை நீங்கிய தலை. நவை - குறறம் வேறும ஓர் தனு - வேறொரு திருமேனியை. எஞ்சுறுது அவிரும திறல. ஏறு தனமிசை - இடபததின மேல். அஞ்சும ஆலம் - யாவரும அணுக அஞசும விடததை. அண்ணல - கடவுள.

895 ஈமம ஆடல் - மயானததில தாணடவம புரிதல. தலையில் எய்துமபடி வைததல, ஒருததி - கங்கை வாம மீதினில் - இடபபாகத தில. வெம குணம் - தாமதகுணம் அண்ணல - தலைவனான கடவுள. என - என்று தககன் கேட்க ஏது ஆகிய காதைகள - இவற்றிற்குக் காரணமாகிய வரலாறுகளை. தாமம - மாலை.

896. வேதன் மான்முத லோரை நம்பன்
விதித்த ழித்திடு போதெலாம்
தீதி லங்கவ ரென்ப ணிந்து
சிரங்கள் கேச மணிந்துநீள்
கோதி லாதொளிர் சூல மீதுடல
கொண்டு நீறது கண்டுபின்
மீது பூசுமி யாவ ருந்தனை
மேவி யுய்ந்திட வேண்டியே. எசு

897. ஈது நின்றிட வாட ககக்ணன்
என்ப வனபுவி யுண்டுமுன்
பாத லந்தனி லேக மாலொரு
பார வேனம தாகியே
கோதி ஞனை மருப்பி னைக்கொடு
கொன்று முன்பென வொன்றவே
பூத லந்தனை வைத்த கந்தை
பொருந்தி மண்ணை யழித்தனன். எஎ

898. அந்த வேலையில வேலை நஞ்சம்
அயின்ற நம்ப னவனறனோ
வந்தொர் கோடு பறிப்ப முன்புலன்
வந்து வந்தனை செய்திட

---

896. பிரமன், திருமால் முதலியவர்களை. விதித்து அழித்திடு போதெலாம் - உண்டாக்கிப் பின் சங்காரம் செய்யும் காலத்தில். கேசம் - மயிர். உடல்கொண்டு - அவர் உடல்களைக் கொண்டு. நீறது கண்டு - எரித்துப் பொடியாக்கி. மீது பூசும் - அந்தப் பொடியைத் தம்மேல் பூசிக் கொள்வார்.

897. பன்றிக்கொம்பை அணிவதற்குரிய காரணத்தைக் கூறுகின்றார். ஆடகக்கணன் - இரணியாட்சன். மால் - திருமால். பார ஏனமது ஆகியே - பெரிய வராக உருவம் எடுத்துக்கொண்டு. கோதி ஞனை - இரணியாட்சனை. மருப்பினைக்கொடு - கொம்பினால் முன்பென - முன்புபோல. அகந்தை பொருந்தி - கர்வத்தை அடைந்து.

898. வேலை நஞ்சம் - கடலில் உண்டான ஆலகால விடத்தை நம்பன் - சிவபிரான் கோடு - கொம்பை. முன்புலன் வந்து - முனையைய

எநதை யேன மருப்ப ணிநதனன்
எண்ணில வானவ ரானவா
உநது மாழி கடைநத வேலையில
மநத ரநதளா வுறறதே. எஅ

899. மால வன்கம டதது ருக்கொடு
மநத ரத்தை வெரிநதனிற்
சால வன்று பரிதத னனகடல
தநத தங்கமு தநதனை
நீல மாய னகநதை கொணடு
நிறைநத வேலை யுழககவே
ஆல முணடவன வநது பறறி
அவன்றன் வனமை யழிததனன். எகூ

900. உற்ற முனனுணா வெய்தி மாயன்
உவப்பி னேடு புகழ்நதிட
அறறை நாளவ னேடு மாபில
அணிந்த னன்னது நின்றிட
முற்று வேளவிய தேத ரும்பா
முதறி யென்றுயா புததியிற
சறறு மெம்பெரு மானை யெண்ணலா
தாரு காவன மாதவா. அ௦

---

அறிவு வரபபெற்று. என மருபபு அணிநதனன - அநதப பனறிக் கொம்பைத திருமாா்பில் தரிததாா. இனி, ஆமையோடு தரித்த காரணததைச் சொல்கிறாா். ஆழி - பாற்கடலை. வேலையில - சமயததில். மநதரம் - மததாக உதவிய மந்தரகிரி.

899. கமடதது உருக்கொடு - ஆமையின உருவததை எடுததுக கொண்டு. வெரிநதனில - முதுகின்மேல. சால - நனறாக. பரித்தனன் - தாங்கினன. அங்கு அமுதநதனைக் கடல் தநதது. நீலமாயன - கரியநிறங் கொண்ட திருமால். வேலை உழக்க - கடலைககலக்க ஆலம உண்டவன - சிவபிரான. அவன்றன வன்மை - ஆமையாக இருநத திருமாலின வலிமையை

900. முன உணர்வு எய்தி - முனனைய அறிவை அடைநது. அவன ஓடு - கூாமாவதாரமெடுதத திருமாலின ஓட்டை. புலிததோல

901. இன்ன பான்மை யறிந்து நம்பன்
இலங்கு சீருள மாலொடு
மன்னி டுங்கயி லாய வெற்பினை
வல்லை தன்னி லகன்றுபோய்த்
தன்னை யுன்னலர் துன்னி வாழ்வுறு
தாரு காவனந் தன்னினற
கன்னி யாகி நடந்தி டும்படி
கண்ண னுக்கருள் செய்தனன். அக

902. மார வேளை யளித்த பச்சுரு
மாயன் மாதுரு வங்கொளாச
சாரு நீடெழி லவ்வ னத்துறு
தாப தாக்கெதிர் போகவிட்
டேரி னோடவர் பன்னி மார்கள்
இருந்த வீதியி லெம்பிரான்
வார மோடு பலிக்க டைந்திடு
வாாக ளென்ன வணைந்தனன். அஉ

903. மாலை சேர்குழன் மாலை நோககினர்
மாலை யெய்தினா மாதவா
சால வெம்பெரு மானை மானினை
மானு கின்ற தடங்கணார்

முதலியவற்றை அணிந்த காரணத்தை இனிக் கூறுகின்றார். யாகமே மேலான முத்தியைத் தரும் என்று எண்ணிச் சிவபிரானை எண்ணாமல் தாருகாவனத்து முனிவர் இருந்தனர்

901. நம்பன் - சிவபிரான். நம்பன அகன்று. உன்னலர் - நினையாதவர்களாகிய முனிவர். கன்னியாகி - பெண்ணாகி; மோகினியாகி. கண்ணனுக்கு - திருமாலுக்கு.

902. மாரவேளை அளித்த - மன்மதனைப்பெற்ற. பச்சுரு - பச்சை நிறத் திருமேனியையுடைய. மாது உருவம் கொளா - மோகினியின் உருவத்தை எடுத்துக்கொண்டு. தாபதர்க்கு - முனிவர்களுக்கு. ஏரினோடு - எழுச்சியோடு அவர் பன்னிமார்கள - அந்த முனிவர்களுடைய பத்தினிகள. வாரம் - அன்பு. பலிக்கு அடைந்திடுவார்கள என்ன - பிக்ஷைக்கு வருபவர்களைப்போல.

கோல மோடெதிர கண்டு மாமயல்
கொண்டு கொண்ட கலனகள்போய்ச்
சூல பாணி தனாது பினறய
ரததி னேடு தொடாநதனா. ௮௩

904. அநத வேலையி லிநது தாரி
அநேக மேனிய னாகியே
வநது மங்கைய ரெண்ணு மாறு
மகிழ்ந்து செய்திட மாதராா
எநதை யாலவ னாலு பததுடன்
எண்ணு கின்றவெண் ணாயிரம்
மைநத ரைததர வநத மைநதாகள
வள்ள றன்னை வணங்கினா. ௮௪

905. சங்க ரன்னமை யுன்னி நீவிர்
தவம்பு ரிநதிடு மென்னவே
அங்க ணினறிடு மைந்த ரேகினா
அநத வேலை முகுநதனும்
மங்கை வந்திட மாத வததர்
தொடாநது வநதுதம மாதரார்
பஙக முறறயா கறப ழிநதிடு
பான்மை கண்டு சினநதனர். ௮௫

---

903. மாலை சேர் - பூமாலையை அணிநத. மாலை நோக்கினர் - மோகினி உருவங்கொணட திருமாலைபபார்தது. மாதவா மாலை எய்தினா; மாலை - காம மயக்கததை. மானினை மானுகினற தடங்கணார் - மானை ஒத்த விசாலமாகிய கணகளையுடைய ரிஷி பததினிகள். கொண்ட கலனகள் போய் - தாம அணிநதுகொண்ட ஆபரணங்களை கழல. சூல பாணி - சிவபிரான.

904. இநது தாரி - சநதிரனைத தரித்த சிவபிரான். எண்ணு மாறு செய்திட. எண்ணாயிரம பிளளைகளைப பெற்றனா. வள்ளல தனனை - சிவபிரானை

905. அநத வேலை - அபபொழுது. மஙகை - மோகினி. பங்கம உற்று - அழிநது.

906. தீதின் மாதர்கள கறப ழித்தவ
னைசசெ குததிடு வோமெனு
மாத ழற்கொண் மகம்பு ரிநததின்
வநது வநது பிறநதிடும்
காது வெமபுலி பரசு நவவி
கடுமப ணிததிரள பூதர்கள
மோது வெண்டலை திண்டி றற்றுடி
முயல கனறமை யேவினா. அசு

907. வேஙகை தனனை யுரிதது டுத்தனன்
மிக்க சாரதா தானையாய்ப
பாங்கு றும்படி யோதி னொருரு
பாத வணகம லததினல
ஏஙகு றும்படி முயல கன்றனை
ஈடி னோடு மிதிததனன்
வாங்க ருஙகவி னுற்ற மேனியின்
மறறை யாவு மணிந்தனன். அஎ

908. ஈடு கொண்டிடு விண்ணு ளாரொழு
எநதை நாடக மாடினான்
வீடி னாரென மாத வததர்
விழுநது பின்னு மெழுநதவம

---

906. செகுததிடுவோம - கொலவோம் மா தழல்கொள மகம் புரிநது-பெரிய அக்கினியை உடைய யாகததைச செய்து. காது - கொல்லும். பரசு - மழு. நவவி - மான பணி - பாம்பு வெண்டலை - தசையில்லாத தலை. துடி - உடுக்கை.

907. வேங்கைதன்னை - புலியை சாரதர் - பூதாகளை. தானையாய் பாஙகு உறும்படி - படையாகித தம பககததிலே இருக்கும்படி. ஈடினோடு - பெருமையோடு. வாங்கு அரும் கவின - மாற்றுதறகரிய அழகை.

908. ஈடு - பெருமை நாடகம் - நடனம. வீடினா என - இறநதவர்களைபபோல அவம கூடும் எஙகள - வீண செயலைக கூடிய எஙகளுடைய. கொளளல - திருவுளளததில் எணணறக. வழுதத - துதிக்க. அன்பை அருளசெய்து.

கூடு மெங்கள் கொடும்பெ ரும்பிழை
கொள்ள லென்று வழுத்தவே
நாடி யன்பருள செய்து பின்கயி
லாய மாமலை நண்ணினன். அஅ

909. ஈது நின்றிட வானை மேனியொ
டூடு கொண்ட கயாசுரன்
வேத னல்கு வரத்தி னூலுயர்
விண்ணு மண்ணு மலைக்கவே
மாத வத்தின ராரு மஞ்சி
வளங்கொள காசியி லோடினா
பாத கன்னவ ரைதொ டர்ந்து
படர்நது காசி யடைந்தனன். அகூ

910. கண்டு மாதவர் காசி யின்மணி
கன்னி யாகிய வாலயத
தண்ட நாத னருட்ப தத்தில்
அடைக்க லம்புக வங்கணன்
ஒண்டி றறகரி முன்ன ரேகி
உரித்து மேனி தரிததனன்
துண்ட வாண்மதி போனு தறபெறு
தோகை யும்பய மாகவே. கூ0

---

909. யானைததோல் போர்த்ததன் காரணம் கூறுகின்றார். ஈடு - பெருமை. வேதன் - பிரமன. அலைக்க - துன்புறுத்த. பாதகன் - கயாசுரன்.

910. மணி கன்னிகையெனனும் திருக்கோயிலில் எழுநதருளிய சிவபிரானிடம். அங்கணன் - சிவபிரான். கரிமுன்னர் ஏகி - கயாசுரனுக்கு எதிரே சென்று. யானையை உரிதது அநதத தோலை உமாதேவியாரும் அஞ்சும்படி போாததுககொணடாா. துண்ட வாள்மதி - பிறை. தோகை - உமாதேவியார்.

911. மற்றி வாறிவ ணிற்ப முற்பகல்
மாய னந்தணன் மேருமேல்
உற்ற கான்முனி வோர்க ளும்பர்
உவந்து வந்து பணிந்துநீள்
வெற்றி பெற்றிடு மூவர் தங்களின்
வீறி னூரெவ ரென்றிட
அற்றை வேலையின் வேத னானெனா
அரியு நானென வோதினன். ௧௧

912. மாறு கொண்டிரு வோரு மெண்டவிர்
வைகல பூசல புரிந்திட
ஆறு கொண்டிடு மண்ண லங்கொளி
ஆகி யந்த வொளிக்குளே
வீறு கொண்டவ ணிறப மாயன
விழுந்து போற்றி யகன்றனன்
நீறு கொண்டிடு மேனி யெந்தையை
நீடு வேத னிகழ்ந்தனன். ௧௨

913. எந்தை யங்கு மனத்தி னலருள
எய்து காரியை நல்கவே
வந்து வேதன துச்சி யாமுடி
வளரு கிர்கொடு கிள்ளலும்

---

911. முற்பகல - முன ஒரு காலத்தில் மாயன அந்தணன்-திரு மாலும் பிரமதேவனும. உற்றகால - அடைந்தபோது முனிவோர்களும் உம்பரும. வீறினூர - உயர்ந்தவா. வேதன நான என - பிரமன் நானே உயர்ந்தவன் என்று சொலல அரி - திருமால

912. மாறுகொண்டு - வாதமிட்டு எண தவிர் வைகல் - அள வற்றகாலம். பூசல - சண்டை ஆறுகொண்டிடும அண்ணல் - கங்காதர ராகிய சிவபிரான. ஒளி ஆகி - சோதி உருவமாகி வீறு கொண்டு - யாருக்கும் இலலாத சிறபபைக் கொண்டு. வேதன இகழ்ந்தனன - பிர மன் அவமதித்தான்.

913. காரியை மனத்தினல் நல்க - பைரவரைத் திருவுளளத்தி லிருந்து சிருட்டி செய்யவே. உச்சி ஆம் முடி - மேலுள்ளதாகிய

சிநதை நொநது வழுத்த வங்கருள்
செய்து மாலுல கெய்தினன்
உநது மாய னிறைஞ்சி மற்றிவண்
உற்ற தென்னென வோதினன். கூங

914. உன்ற லைப்படு சோரி நீரை
உகுததி யென்ன நகததினல
தன்ற னெறறி பிளநது சோரி
தனைப்பொ ழிநதிட நமபிரான்
வென்றி சேரய னாபெ ருஞ்சிர
மீதி லேறறன னாறுநா
றென்று கூறிடு மாண்டு செலல
இளைதது மாயன் விழுநதனன. கூச

915. நீடு கைத்தலை பாதி யேனும்
நிறைநத திலலை யவனறனைப்
பீடு மேவிய காரி யன்பொடு
பின்பெ ழுப்பி நிறுததியே
ஈடு கொண்டு பொருநதி மேலுல
கெய்தி யண்ட மியாவையும
நாடி யங்க ணளிததி ருநதனன்
நாத னாரரு ளாலரோ. கூரு

---

தலையை. வள் உகிர்கொடு - கூரிய நகததால். எய்தினன் - பைரவர் அடைநதார்.

914. உன் தலையின இரத்ததைச் சொரிவாயாக. தன தன் நெற்றி - தனது நெறறியை. பிளநது - கீறி நமபிரான் அயனார் பெருஞ சிரமீதில் ஏறறனன - பைரவா கிளளிய பிரமனது கபாலததில ஏற்றுக் கொண்டார். பதினாயிரம வருஷம செல்லவே திருமால் தளாந்து விழுநதா.

915. திருமாலின் இரதததால பைரவா கையில் இருநத கபா லத்தின் ஒரு பாதிகூட நிறையவில்லை. காரி - பைரவா. அவன்றனை எழுபபி. அளித்திருநதனன - காவல செய்திருந்தார்.

916. பகர்ந்த வின்னது நிற்ப முற்பகல்
பண்ண வர்க்கிறை யானவன்
அகந்தை கொண்ட மனத்தொ டுங்கயி
லாய மந்திர முன்புற
உகந்து சாரதர் போல வெண்குணன்
உற்ற னன்குலி சத்தினன்
மிகுந்த பூத வரன்ற னகென
வேளை யென்று வினவினன். கூகசு

917. வேளை கேட்டுழி வேளை வென்றவன்
வெஞ்சி னங்கொடு நின்றிடக்
கோளு றிந்திர னுஞ்சி னந்துயா
குலிச வேலினை யெறியவே
ஆளு மெம்பெரு மானை மேவி
அருந்து கட்பட வங்கணன்
நீளு ருத்திர மேனி கொண்டு
நெடுஞ்சி னங்கொடு நின்றனன். கூஎ

918. அன்ன காலையி லுன்றன மாயம
அறிந்தி லேனறி வற்றயான
என்னி ரும்பிழை யெண்ண லென்ன
இறைஞ்சி நிற்க விடுத்தரோ

916. பண்ணவர்க்கு இறை - இந்திரன. கயிலாய மந்திரம் முன்புஉற - கயிலாயத்தில சிவபிரான் திருக்கோயிலுக்கு முன்பே வர. சாரதர் போல - பூதனைப்போல. எண்குணன் - சிவபிரான. குலிசத்தினன் - இந்திரன பூத : விளி. என்ன வேளை - என்ன சமயம

917. வேளை வென்றவன - காமாரியாகிய சிவபிரான். கோள் உறு இந்திரன் - கொள்கையை உடைய இந்திரன் குலிசவேலினை - வச்சிராயுததைத் துகட்பட - பொடியாக அங்கணன - சிவபிரான். உருத்திர மேனிகொண்டு - ருத்திர ரூபத்தை எடுத்துக்கொண்டு,

918. மாயம - மறைந்திருந்த நிலையை. சினமான தீயினை - கோபமாகிய அக்கினியை. மேல வேலையில் - மேற்குக் கடலில. சலந்தரப் பெயர் மைந்தனாகி - அந்த அக்கினியானது சலந்தரன் என்னும் பெயருடைய வலியை உடையவனாகி.

மின்னு தன்சின மான தீயினை
 மேலை வேலையில் வீசலும்
மன்னு கின்ற சலந்த ரப்பெயா
 மைந்த ஞகி வளர்ந்தனன். ௯௮

919. வளர்ந்த பின்பவு ணக்கு லத்தொடு
 மண்ணி லுற்றுயர் விண்ணுளோா
தளர்ந்தி டும்படி செய்தி ரண்டு
 சதங்கொ ளாயிர வற்சரம்
வளைந்து மாலொடு போர்பு ரிந்திட
 மால்பு கழ்ந்து படர்ந்தனன்
கிளர்ந்த வும்பர்க ளோடி ஞாகயி
 லாய மாகிய கிரியினமேல். ௯௯

920. வெள்ளி வெற்பிடை விண்ணு ளாரவர்
 மேவி யுற்ற தறிந்துபின்
தள்ளு தற்கரு மொய்ம்பு கொண்ட
 சலந்த ரன்படை சூழவே
எள்ள ரும்புகழ் மேவு றுங்கயி
 லாய விண்டுவி லேகலும்
வள்ளல் வாசவன வேண்ட வேதியன்
 வடிவு கொண்டவண் வந்தனன். ௧௦௦

921. எங்க ணுயக னெங்க ணேகுதி
 என்று கூற வரன்றனோ
டிங்க மாசெய மேவி னேனென
 எண்டு நின்வலி காண்டுமென்

---

919. அவுணகுலத்தொடு - அசுரா கூட்டத்தோடு. இரண்டு சதங்கொள ஆயிர வற்சரம - இருநூறாயிர வருடம. சலந்தரன அசுராக ளோடு வந்து திருமாலோடு போர்செய்யத திருமால் ஆறறுராகி அவனைப் புகழ்ந்துவிட்டுப போனா.

920. விண்ணுளாரவர் - தேவா. மொய்ம்பு - வலிமை. விண்டு வில் - மலையில். வளளல - சிவபிரான. வாசவன - இந்திரன். வேதியன் வடிவுகொண்டு - ஓா அந்தணனைபபோன்ற வடிவத்தை எடுத்துக் கொண்டு.

றங்கண் மண்ணிலொ ராழி தாளின்
அமைதடெ டுக்குதி யென்னவே
மங்கு தன்சிர மீதெ டுப்ப
உடல்கி ழிந்து மடிந்தனன். கoக

922. வீறு மின்னது நிற்க மாயன்
விளிந்து யாவு மழிந்தபோ
தூறி லாம விருக்க நச்சி
உரந்த ருந்தரு மத்திறை
ஏற தாமுரு வெய்தி நாதன்முன்
ஏகி வந்தனை செய்துசீர
கூறி யிங்கெனை யூர்தி கொண்டருள்
என்ன வப்படி கொண்டனன். கoஉ

923. உற்ற வின்னது நிற்க வொற்கமில்
உந்து பாலுறு வேலையில்
வற்றி டாவமு தம்பெ றும்படி
மந்த ரந்தனை மத்தெனக்
கொற்ற வெம்பணி நாணெ னும்படி
கொண்டு மான்முத லண்டரும்
துற்ற தானவ ருங்க டைந்தனர்
தொன்மை வைகலின் வன்மையால். கoந

921. எங்கண ஏகுதி - எங்கே போகிறாய் கூற - சிவபிரான் சொல்ல சிவபிரானோடு போரிட வந்தேன என்று சலந்தரன் சொன்னான். காண்டும - பார்ப்போம். நிலத்தினமேல் காலால ஒரு சக்கரத்தைக் கீறி அதை எடுப்பாயாக என்று பிராமண வடிவங்கொண்ட சிவபிரான் சொல்ல, அதை அவன எடுக்க, அவன உடம்பை அது அறுக்கவே அவன் இறந்தான்.

922. ஊறு - துன்பம. நச்சி - விரும்பி. தருமத்து இறை - தருமதேவதை. ஏறதாம் உரு எய்தி - இடப ரூபம கொண்டு. தரும தேவதை இடபமாக அதைச சிவபிரான வாகனமாக ஏற்றருளினார். ஊர்தி - வாகனமாக. அப்படி - அவ்வாறே வாகனமாக

923. ஒற்கம இல் - தளர்ச்சியிலலாத. பாலுறு வேலையில் - பாற்கடலில. மந்தரமலையை மத்தாகவும வாசுகியாகிய பாம்பைக் கயிறாக

924. நாக வாயினு மாழி வாயினும்
நஞ்செ ழுநது தொடர்நதிட
மேகமேனிய னாதி யாகிய
விண்ணு ளாாகள வெரீ இயிரிந
தேக நாயகன் வாழ்பெ ருங்கயி
லாய விண்டுவி லேகியே
சோக மோடர னைப்ப ணிநதுற
துகக நக்கனொ டோதினர். ௧௦௪

925. அநத வேலையில விண்ணு ளாாகளும்
ஆரு முய்ய விரஙகியே
உநது மேவலசெய் சுநத ரன்றனை
ஒல்லை சென்று விடங்கொடே
வநதி டென்ன நடநது கைகதொடு
வநத ரன்கையி லுய்ப்பவங
கெநதை யுண்டன னுணடி லானெனின்
யாவர் பின்ன ரிருப்பவா. ௧௦௫

926. முக்க ணாயகன் மிகுமு யிாதசொகை
அகிலம யாவு முடித்தபோ
தக்க ணநதனி லீம மாயிடும
அன்ன தாகிய வீமமேல

---

வும் கொணடு தேவரும அசுரரும பாற்கடலைக கடைநதனர். நாண் - கடைகயிறு. அணடா - தேவா. துற்ற - நெருங்கிய. தானவரும் - அசுரரும். தொனமை வைகலின - பழஙகாலததில.

924. நாகவாயினும் - வாசுகியெனனும பாம்பின் வாயிலிருந்தும. ஆழிவாயினும - பாற்கடலிலிருநதும். மேகமேனியன் - திருமால். வெரீஇ - அஞசி இரிநது ஏக - செடடு ஓடிபபோக ஏகநாயகன் - சிவபிரான விணடு - மலை. நககனொடு - சிவபிரானோடு

925. உய்ய - உயிா பிழைக்க. உய்ப்ப - கொடுக்க.

926. அகிலம யாவும முடித்தபோது - சர்வலோகங்களையும் சங்காரம் செய்த காலத்தில. ஏமம ஆயிடும் - எலலா உலகங்களும் மயானமாகிவிடும். மடநதை - உமாதேவியாா.

மைக்க ருங்கண் மடநதை பங்குள
வளள லாடுமி தன்றியும்
தக்க கங்கையை யோங்கு மாமுடி
தாங்கு கினறது சாற்றுவாம். ௯0௬

927. முனன ரோாபக லமமை நமபன்
முரண்ட ரும்விழி பொததலும
அன்ன காலையி லெங்கு முசசுடா
அறறு வீறிரு ளாகவே
மின்னு நெறறியி லுற்ற கண்ணை
விழிப்ப வெங்கும விளங்கியே
தொன்மை போலுற வஞ்சி வஞ்சி
துணைக்க ரததை விடுததனள. ௯0௭

928. அமமை தன்கர வங்கு லிபபுடை
அங்கு வோவை யெழுநதுபின
செம்மை கொண்டிடு பதத தான
திருநது கங்கைக ளாகியே
வெமமை யோடுல கங்கள கொண்டிட
மேவ மானமுதல விண்ணுளோா
எம்மை யாளுடை யண்ணல வாழ்கபி
லாய வண்குவ டெய்தினா. ௯0௮

929. கண்ணு தற்பர மற்ப ணிந்துல
கங்கள கொண்டிடு கஙகையை
அண்ண லேயிவ ணீய ணிநதெமை
ஆளதி யென்று வழுததலும

927. முரண் தரும் - ஒனறுக்கு ஒன்று மாறுபடும். முச்சுடர் அற்று - சூரிய சநதிராககினிகள ஒளிதருதலை நீங்கி அஞ்சி வஞ்சி - உமாதேவியார் பயநது.

928. கர அங்குலிப்புடை - கைவிரலகளில். பத்து விரல்களி லும் உணடான வோவை பததுக் கஙகைகள் ஆயின. குவடு - மலை.

929. அணிநது - தரிதது ஒளி திருவேணியில் - ஒளியை யுடைய திருமுடியில. தண் நிலாவு ஒரு ரோமமீது - குளிர்ச்சியை

